உ

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.



தொகுதி 18 } ஸ்ரீமுக வருஷ சித்திரைமீ" கஉ
1933ஷு ஏப்ரல்மீ" 13உ { பகுதி 10

## கடவுள் வணக்கம்.

பூரணி புராதனி சுமங்கலி சுதந்தரி
புராந்தகி த்ரியம்பகி யெழிற்
புங்கவி விளங்குசிவ சங்கரி சகஸ்ரதள
புட்பமிசை வீற்றி ருக்கும்
நாரணி மனாதீத நாயகி குணாதீத
நாதாந்த சத்தி யென்றுன்
நாமமே யுச்சரித் திடுமடியர் நாமமே
நானுச்ச ரிக்க வசமோ
வாரணி சடைக்கடவுள் ஆரணி யெனப்புகழ
அகிலாண்ட கோடி யீன்ற
அன்னையே பின்னையும் கன்னியென மறைபேசும்
ஆனந்த ரூப மயிலே
வாரணியும் இருகொங்கை மாதர்மகிழ் கங்கைபுகழ்
வளமருவு தேவை யரசே
வரைராஜ னுக்கிருகண் மணியா யுதித்தமலை
வளர்காத லிப்பெணுமையே. (1)

தந்தை தாய்தமர் மகவெனும் அவையெலாம் சகத்தில்
பந்த மாமென்றே யருமறை வாயினாற் பகர்ந்த
எந்தை நீயெனை யின்னமவ் வல்லலில் இருத்தின்
சிந்தை தான்தெளிந் தெவ்வணம் உய்வணம் செப்பாய். (2)

தீங்கரும் பென்றாலினியா தின்றாலினிப் பனபோற்
பாங்குறும்பே ரின்பம் படைக்குநாள் எந்நாளோ? (3)

# அரும்பொருள் விளக்கம்

1. இதனால் அடியார்க் கடியாராய் விளங்கவேண்டும் என்று விழைகின்றார்.

(இ-ள்) ஆத்திமாலையை அணிந்த சடையினையுடைய சிவபெருமான் வேத முதல்வி என்று துதிக்க, அண்டகோடிகள் எல்லாவற்றையும் பெற்றருளிய அன்னையே! அங்ஙனம் அருளிய பிறகும் கன்னிகை என்று வேதங்கள் துதிக்கின்ற சுகவடிவான மயில்போல்பவளே! கச்சணியும் இரு தனங்களையுடைய பெண்கள் மகிழும்படியான கங்கையினால் புகழ்ப் பெற்ற வளம் பொருந்திய தேவை நகர்க்கரசியே! மலையரசனுக்கு இருகண் மணிகளைப்போல் அவதரித்தருளிய மலைவளர் காதலிப் பெண் உமையே! பூரணி என்றும், புராதனி என்றும், சுமங்கலை என்றும், சுதந்தரி என்றும், புராந்தகி என்றும், திரியம்பகி என்றும், அழகுவாய்ந்த புங்கவி என்றும் விளங்குகின்ற சிவசங்கரி என்றும், ஆயிரந் தளங்களுள்ள மலரின்மீது வீற்றிருக்கும் நாரணி என்றும், மனத்துக் கெட்டாத இறைவி என்றும், குணங்கடந்த நாதாந்த சத்தி என்றும் உன்னுடைய திருநாமங்களையே உச்சரிக்கின்ற அடியார் திருப்பெயர்களையே அடியேன் உச்சரிக்க வசமாகுமோ என்க.

"எத்திறத்தினின்றான் ஈசன் அத்திறம் அவளும் நிற்பள்" என வருவதால் பூரணி முதலிய திருநாமங்கள் முதல்வனைப் பற்றி முதல்விக்கு முளவதனால் இவ்வாறு கூறினர். சர்வவியாபியாய் விளங்கலின் பூரணி எனவும், முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளாய் விளங்குபவளாகலின் புராதனி எனவுங் கூறினர். இறைவன் நித்தியனாகலின் சுமங்கலை என்றார். தன் வயத்தியாகலின் சுதந்தரி எனவும், திரிபுர நாசனியாகலின் புராந்தகி எனவும், சுகத்தை உண்டாக்குபவளாகலின் சங்கரி எனவும், ஆறு தாரங்களைக் கடந்த சிரத்திலே ஆயிர மிதழுடனே கூடியிருக்கும் தாமரையினடுவே வீற்றிருக்கின்றவளாகலின் புஷ்பம்சை வீற்றிருக்கும் நாரணி எனவும், பாசஞானத்திற் கெட்டாதவளாகலின் மநாதீத நாயகி எனவும் கூறினர்.

2. இதனால் சுற்றப்பற்றை நீக்கியருள வேண்டும் என்று பிரார்த்திக்கின்றார்.

(இ-ள்.) தந்தை, தாய், உறவினர், புத்திரன் என்று சொல்லப்படுகின்ற அவைகளெல்லாம், உலகில் தளையாகுமென்றே அரியவேதங்களை யருளிச் செய்த திருவாக்கால் திருவாய் மலர்ந்தருளிய எமது தந்தையாகிய தேவரீர் அடியேனை இன்னமும் அத்துன்பத்தில் அழுத்தினால் மனந்தெளிந்து உய்யும் வகை எவ்வகை சொல்லுவாய் என்க.

தாய் தந்தை முதலாயினார் பால் வைத்த பேரன்பினால் முதல்வனை மறந்து பிரபஞ்சமாய் வாழுபவர்கட்கு அவ்வன்பே பந்தமாய் விடுமாகலின் "தந்தை தாய் தமர் மகவெனும் அவையெலாம் சகத்தில் பந்தமாம்" என்றனர்.

3. இனிய கரும்பு என்று வாயாற் சொன்ன மாத்திரத்திலே தித்தியாது. மென்று தின்றால் இனிய சுவை யுண்டாகுமாறுபோல அநுபவத்தில் பெரிய இன்பத்தினைத் தருகின்ற நாள் எந்நாளோ? என்க.




## கடவுள் பக்தியா காட்டுமிராண்டித்தனமா?



பற்பல துறைகளிலும் அறிவு வளர்ச்சியும்-நாகரிகமும் மேலோங்கி வருவதாகப் பெருமை பேசப்படும் இந்த இருபதாம் நூற்றாண்டில்-புண்ணிய பூமி-ஞானக் களஞ்சியம் என்று வானளாவ வருணிக்கப்படும் நமது நாட்டில், இன்னும் கடவுளின் பேராலும், சாஸ்திரங்களின் பேராலும், பக்தியின் பேராலும் காட்டுமிராண்டித்தனமான காரியங்களும் கொலைபாதகச் செயல்களும் நடைபெற்றுவருவது பெரிதும் மானக்கேடான விஷயமாகும். இந்த ஏப்ரல்மீ 3-ம் நாளில் திருவண்ணாமலையைச் சேர்ந்த அடியண்ணாமலையில் ஒரு குடும்பத்தைச் சேர்ந்த ஏழுபேர் கடவுளின் பேரால் கொலையுண்டிறந்த கோர சம்பவத்தைத் தினசரிப் பத்திரிகைகளில் கண்டதும் ஒன்றும் தோன்றாமல் நாம் திடுக்கடைந்துவிட்டோம். அந்தோ ஒருயிரா-ஈருயிரா? ஏழுபேர்! பகவானுக்கு நரபலி! ஒரு ஐம்பது வயது படைத்த மனிதர் தம் மனைவியையும், மக்களாகிய வயதுவந்த இரண்டு ஆண்களையும், இரண்டு பெண்களையும், ஒரு குழந்தையையும் வெட்டிக் கொலை செய்துவிட்டுத் தாமும் தற்கொலை செய்துகொண்டார் என்றால் இது மிருகச் செயலா? மனிதச் செயலா? என்று சற்றே சிந்திக்குமாறு நேயர்களை வேண்டுகின்றோம். இந்தக் கொலைபாதகம் செய்த மனிதர் திரிச்சி—உடையார்பாளையத்தைச் சேர்ந்தவராம். வைத்தியலிங்கப் படையாச்சி மகன் வேலாயுதப் படையாச்சியாம். "நாங்கள் மனமார இறந்து விடுகின்றோம். எங்களுடைய தேகங்களை மரண பரிசோதனை யாதும் செய்யவேண்டாம். எங்கள் உடல்களை இனத்தவரே அடக்கம் செய்யட்டும்" என்ற பொருள்பட ஒரு கடிதமும் எழுதிவைத்திருந்தாராம்—அந்தக் கொலை பாதக வேலாயுதப் படையாச்சி. இவர் தம் குடும்பத்துடன் ஸ்தல யாத்திரை செய்துவிட்டு வந்ததாகவும் செய்தி எட்டியது.

கொலை யுண்டவர்களின் நெற்றிகளிலெல்லாம் குங்குமப் பொட்டுகள் இருந்தனவாம். இவர்கள் கொலையுண்ட இடத்தில் குங்குமம் வைக்கப்பட்டு—பூஜை நைவேத்தியங்களும் செய்யப்பட்டு—வெற்றிலை பாக்கு—தேங்காய் பழம்—கற்பூரம் வகையராக்களும் வைக்கப்பட்டிருந்தனவாம். இந்தக் கோர சம்பவத்திற்கு அடிப்படையான காரணம் இஷ்டசித்திக்குரிய காமிய நோக்கமா? கடன் முதலிய குடும்பத் தொல்லைகளா? என்ற ஆராய்ச்சியில் இறங்க நாம் விரும்பவில்லை. அஃது எவ்விதமாயினும் ஆகுக. இந்தக் கொலைகளைக் கடவுளின் பேரால் நடத்திவிட்டால் குற்றமில்லை—பாவமில்லை என்ற நம்பிக்கை அந்தக் கொலையாளருக்கு ஏற்பட்டிருக்கவேண்டும் என்பதில் சிறிதும் ஐயங்கொள்ள இடமில்லை என்பதே நமது அபிப்பிராயம். கடவுளின் பேரால் நரபலி கொடுக்கும் வழக்கம் நமது நாட்டில் தொன்று தொட்டு இருந்து வருகிறது என்னும் உண்மையை இன்றும் பண்டை நூல்களில் காணலாம். இது ஒரு வகையான மத வுணர்ச்சியாகவும் மதிக்கப்படுகிறது. சில மாதங்கட்குமுன் வட இந்தியாவில் ஒரு ஊரில் ஸ்ரீ காளிகோவிலில் "நரபலி" கொடுக்கப்பட்ட செய்தியையும், இதே திருவண்ணாமலைப் பக்கத்தில் கடவுளின் பேரால் ஒரு "நரபலி" நடைபெற்றதையும், கோவை ஜில்லா உடுமலைப்பேட்டையைச் சேர்ந்த சோமவாரப்பட்டிக் கண்டியம்மன் கோவிலில் ஒரு பூசாரி தன் மகனை "நரபலி" கொடுத்ததையும் நேயர்கள் பத்திரிகைகளில் படித்திருக்கலாம். இக்காலச் சட்டப்படி இவையெல்லாம் குற்றமானாலும் மத வுணர்ச்சி என்று மதிக்கப்பட்டால் குற்றமில்லை என்றே எண்ண இடம் உண்டு. தெய்வங்கட்கு ஆடு, கோழி, எருமைக்கடா முதலியவைகளைப் பலி கொடுப்பதும் இந்த "நரபலி" மதத்தின் ஒரு கிளை என்றே கருதலாம். அவ்விதம் தெய்வங்களின் பேரால் நரபலிகளும், ஏனைய உயிர்ப்பலிகளும் நிகழ்வதற்குக் காரணமாக விளங்கும் மூட நம்பிக்கைகளை வேருடன் களைந்தெறிய வேண்டிய பொறுப்பு யாரைச் சேர்ந்தது என்று கேட்கின்றோம். யாரோ ஒரு சில அறிஞர்கள் என்போர் இத்தகைய பலிகளை உண்மைச் சமயம் அநுமதிப்பதில்லை என்று வாயளவில் பேசிவிட்டால் போதாது. உண்மையான சமய தத்துவங்களை நாட்டில் பரப்பக் கடமைப்பட்டவர்களாகிய சமயத் தலைவர்கள்-மடாதிபதிகள் இந்த மூடக்கொள்கைகளை வெட்டி வீழ்த்த முன் வர வேண்டும்.

நமது நாட்டில் உண்மையான—மக்கள் வாழ்க்கையை வளம்படுத்தக் கூடிய மதக்கொள்கைகள் மறைந்து விட்டமையினாலேயே கடவுளின் பேராலும் சாஸ்திரங்களின் பேராலும் பல கொடுமைகள் நிலவி வருகின்றன. இப்பொழுது நாம் சுதந்தரம் இன்றி வறுமையிலும், அறியாமையிலும் வருந்திக் கொண்டிருப்பதற்கு நமது சமூக அமைப்பும் அதற்காதாரமான சமயக் கட்டுப்பாடுகளும் வெகுதூரம் காரணமா யிருக்கின்றன என்பதைக் கண்கூடாகக்கண்டு வருகின்

றோம். பலவித மூடக்கொள்கைகளும் சாதிசமய வேற்றுமைகளும், தீண்டாமையும், பெண்களின் அடிமைத் தன்மையும் ஹிந்து சமூகத்தைப் பாழ்படுத்தி வருகின்றன என்பதை எவரே மறுக்க வல்லார்? அரசியல் விடுதலைக்கு இவையெல்லாம் முட்டுக்கட்டைகளாக இருக்கின்றன என்பதை உணர்ந்த காந்தியடிகள் போன்ற தலைவர்கள் இப்பொழுது தீண்டாமை விலக்குப் போன்ற சமூகச் சீர்திருத்தத் தொண்டில் முனைந்து நிற்பது பெரிதும் குறிப்பிடத்தக்க விஷயமாகும். பெரிய பெரிய சாஸ்திரிகள் என்பவர்களும் பண்டிதர்கள் என்பவர்களும் மடாதிபதிகள் என்பவர்களும், காந்தியடிகளுடன் போர் தொடுக்க முற்படுகின்றார்களே யொழிய நமது நாட்டின்-சமூகத்தின் தற்கால இழிநிலையை ஒரு சிறிதும் உணர்ந்து நடக்கின்றார்கள் இல்லை என்பதை எண்ணி எண்ணி வருந்த வேண்டியிருக்கிறது. ஆனால் இப்பொழுது எடுத்துக்கொண்ட விஷயம் இது அல்ல. நரபலி-ஏனைய உயிர்ப்பலிகளின் கொடுமைகளை எடுத்துக்காட்ட வந்த சந்தர்ப்பத்தில் மூடநம்பிக்கையின் பாற்பட்ட தீண்டாமை போன்ற சமூகத் தீமைகளைச் சிறிதே நினைவூட்டக் குறிப்பட்டதை மற்றொன்று விரித்தலாகக் கருதா திருக்குமாறு நேயர்களை வேண்டுகின்றோம்.

நமது உண்மைச் சமயம் நரபலி—மற்ற உயிர்ப்பலிகளை அநுமதிக்கவில்லை என்பதை நாம் ஒப்புக்கொள்ளுகின்றோம். ஆனால் அவை இக்காலத்திலும் தாராளமாக நடைபெற்றுக் கொண்டே இருக்கின்றன. சிறு தேவதைகட்குப் பலிகள் மாத்திரமா? இன்னும் எத்துணையோ ஊழல்கள் அவற்றின் பேரால் நடந்து கொண்டிருக்கின்றன. ஊர்த்தேவதைகள் அல்லது கிராமதேவதைகட்கு ஆண்டுதோறும் விழாச் சிறப்புச் செய்யுங் காலத்தில் சாதாரண மக்களின் நேர்ச்சிக்கடன்களும் வேஷங்களும்—பயங்கரமும் அருவருப்பும் நிறைந்த காட்சிகளாக இருக்கும். மாரியம்மன்—மாகாளியம்மன்—திரௌபதியம்மன் முதலிய தேவதைகளின் திருவிழாக்களில் என்ன காரியங்கள் நடக்கின்றன? ஆடு கோழிகளைக் கொன்று தின்னல், கள்ளுண்டு களித்தல், கண்டவர்கள் எள்ளி நகையாடி அருவருக்கும் படியான இழிந்த வேஷங்களைப் போட்டுக்கொண்டு ஆடல், துர்ப்பாஷைகளோடு கூடிய பாட்டுக்களைப் பாடல் முதலியவைகளே தற்கால ஊர்த்தேவதைகளின் திருவிழாக்களாக விளங்குகின்றன. நெருப்பு மிதித்தல், நெருப்புச்சட்டிகளை எடுத்துக்கொண்டு குதித்தல், உடம்புகளிலெல்லாம் எள்ளு விழவும் இடமின்றி ஊசிகளைக் குத்திக் கொள்ளல், அவ்வூசிகளில் தேங்காய்—இளநீர்—பழம்—பன்னீர்ப் புட்டி முதலியவைகளைக் கட்டித் தொங்கவிடல், நாக்கிலும், கன்னங்களிலும் நீண்ட ஊசிகளைக் குத்திக்கொள்ளுதல் முதலிய கொடுமைகள் நேர்ச்சிக் கடன்களாகவும் பக்தியாகவும் சாதாரணமாக மதிக்கப்படுகின்றன. எந்தச் சமய சாஸ்திரம் இந்த அநாகரிகச் செயல்களுக்கு இடந்தருகின்றது என்று எமக்கு விளங்கவில்லை. கோவை

ஜில்லா—பொள்ளாச்சி முதலிய ஊர்களில் முதுகுகளில் பெரிய கொக்கிகளைக்குத்தி அவற்றில் சிறுதேர்களையும், மோட்டார்கார்களை யும் பிணித்து, கைகளில் நெருப்புச் சட்டிகளை ஏந்திக்கொண்டு மூடப் பூச்சிகளான மக்கள் கொடும் வெய்யிலில் இழுத்துச் செல்லுவது மகா கோர-விபரீதக் காட்சியாக இருக்கும். இவ்வித "நேர்ச்சிக் கடன்" களை நிறைவேற்றுவோருள் சிலர் இவ்வாறு செய்வதை உண்மை யாகவே பக்தி என்று அறியாமையால் நம்பினாலும், அநேகர் மற்ற வர்கள் தங்களை வீரர்கள் என்று பாராட்ட வேண்டும் என்ற ஆசை கொண்டே அந்தச் சங்கடமான காரியங்களில் தலையிடுகின்றார் கள். இவர்களிடம் பக்தியோ சிரத்தையோ இருப்பதாகச் சொல்லிவிட முடியாது. இத்தகைய கொடுந்துன்பச் செயல்கள் தேவதைகளின் பேரால் சகஜமாக நடைபெறுவதும், இவற்றிற்குச் சமூகம் இடந்தந்து ஆக்கமளித்து வருவதுந்தான் கடைசியாக மக்களையே கடவுளர்க்கு நர பலியிடும்படியான மனப்பான்மை யையும், உணர்ச்சியையும், மூடத்துணிச்சலையும் கிளப்பிவிடுகின் றன என்று எடுத்துக்காட்ட விரும்புகின்றோம். அடியண்ணாமலையில், பெற்ற மக்களையும், கர்ப்பவதியான மனைவியையும் சித்திரவதை செய்துவிட்டுத் தாமும் தற்கொலை செய்து கொள்ளும்படியான உணர்ச்சியும் மனப்பான்மையும் அந்த வேலாயுதப் படையாச்சிக்கு எங்கிருந்து வந்தது என்று கேட்கின்றோம்? கடவுளின் பேரால் இந் தக் கொலைகளைச் செய்துவிட்டால் பாவமில்லை என்று அவர் கொண் டிருந்த மூட மத நம்பிக்கையே இவ்விபரீதத் துணிச்சலுக்குக் காரண மாகும் என்பதை எவரே மறுக்கத் துணிவார்? நமது நாட்டில் தோன் றிய சைவ—வைணவ—அத்வைத—பௌத்த—சமண முதலிய எந் தச் சமயமும் கடவுளின் பேரால் நரபலி கொடுப்பதையோ ஏனைய உயிர்ப்பலி கொடுப்பதையோ அங்கீகரிக்கவில்லை என்பதை நாம் ஒப் புக் கொள்ளுகின்றோம். ஆனால் சமய தத்துவங்களும் சமய உணர்ச்சி யும் வீறிட்டு விளங்குவதாகச் சொல்லிக் கொள்ளும் ஹிந்து சமூகம் இக்கொடுமைகளை நீக்க என்ன செய்து கொண்டிருக்கிறது என்பதே நமது கேள்வி. "தாழ்த்தப்பட்ட மக்களை உயர்த்த வேண்டும் என்றால் மதம் போச்சு—ஒன்றுமறியாத பச்சிளங் குழந்தைகட்குக் கலியா ணம் செய்யக்கூடாது என்றால் மதம் போச்சு—பாலிய விதவை கட்கு மறுமணம் செய்ய வேண்டும் என்றால் சாஸ்திர விரோதம்—விபசாரத் தீமையை ஒழிக்க வேண்டும்—கோவில்களில் சிறு பெண் கட்குப் பொட்டுக் கட்டும் மானக்கேட்டை நீக்கவேண்டும் என்றால் ஆகம விரோதம்—ஒரு குறிப்பிட்ட சமூகப் பெண்கள் சதிர் ஆடக் கூடாது என்றால் கலை நாசம்" என்று கூச்சல்போடும் சாஸ்திரிக ளும், பண்டிதர்களும், வைதிகத் தலைவர்களும்—மடாதிபதிகளும் அவர்களைப் பின்பற்றுவதாகச் சொல்லிக் கொள்ளுவோரும் இந்த நர பலி—உயிர்ப்பலிக் கொடுமைகளை ஒழிக்கக் கடுகளவேனும் முயற்சி

செய்கிறார்களா என்று கேட்கின்றோம். "நமது சமூகம் முன்னேற வேண்டும்—நாடு முன்னேறவேண்டும்—நாம் விடுதலை பெற்றுச் சுதந்தர இன்பம் அடையவேண்டும்; ஆகையால் அம் முன்னேற்றங்கட்கு முட்டுக்கட்டைகளாகவுள்ள பொருளற்ற மூடப்பழக்க வழக்கக் கொடுமைகளை நாட்டினின்றும் ஒழிக்கவேண்டும்" என்றால் முகடுமுட்ட வெறுங் கூச்சல் போடும் குறுகிய நோக்கம் படைத்த சமயத் தலைவர்கள் இருக்கும்வரை கோரமான நரபலிக் கொடுமைகள் நிகழ்வதில் வியப்பொன்றுமில்லை என்பதே நமது கருத்து. அன்பும்—அஹிம்சையும் அடிப்படையாக விளங்கும் சமயங்கள் நிலவிய நமது நாட்டில் இப்பொழுது கொலைக் கொடுமை அடிப்படையாகவுள்ள வெறும் சம்பிரதாயங்கள் மட்டும் வேரூன்றிக் கிடக்கின்றன. உண்மைச் சமய தருமங்களை நாட்டில் பரப்பவேண்டிய மடாதிபதிகளும்-ஆச்சாரியர்களும் இக்காலத்தில் ராஜபோகக் களியாடல்களில் மூழ்கிக் கிடக்கின்றனர். தங்கள் கடமைகளை மறந்து லௌகிக கௌரவங்களில் பித்துப்பிடித்தலைகின்றனர். எப்படிப் பேசினால் ஜனங்களிடம் பொருளை எளிதில் பறிக்கலாமோ அப்படிப் பேசிக்கொண்டு திரிகின்றனர். இவர்களா மக்கள் வாழ்க்கையைச் சீர்திருத்துகின்றவர்கள்? இவர்களா ஆன்மார்த்த வழி காட்டுகின்றவர்கள்? என்று கேட்கின்றோம். கிறிஸ்தவ சமயத் தலைவர்கள் நமது நாட்டில் செய்து கொண்டிருக்கும் அற்புதச் செயல்களேனும் இவர்களுடைய கண்களைத் திறந்துவிடவில்லையே. கிறிஸ்தவ மிஷனரிகள் எங்கே பிறந்தவர்கள்? எங்கே வளர்ந்தவர்கள்? எந்நாட்டுப் பொருள்களைக்கொண்டு அவர்கள் இந்நாட்டில் வேலை செய்து வருகிறார்கள்? என்ற விஷயங்களை நமது மடாதிபதிகள்—ஆச்சாரியர்கள் அணுவளவேனும் சிந்தித்துப் பார்க்கின்றார்களா? இல்லை! இல்லை!! இல்லை!!!—என்றே கூறிக் கூறி வருந்தவேண்டியிருக்கிறது. நமது சமயத் தலைவர்களின் அசட்டுத் தனத்தினாலேயே ஆண்டுதோறும் பல்லாயிரக் கணக்கான ஹிந்து மக்கள் அந்நிய மதத்தவர்களாகி வருகின்றனர். கிறிஸ்தவ சமயத் தலைவர்கள் நமது நாட்டில் நிறுவியுள்ள கல்லூரிகட்கும்—கலாசாலைகட்கும் ஆரம்பப் பள்ளிக்கூடங்கட்கும்—ஆஸ்பத்திரிகட்கும் ஒரு அளவு உண்டா? இவ்வேற்பாடுகளின் நுட்பங்களை ஏன் நம்முடைய சமயத் தலைவர்களும் உணர்ந்து கடைப்பிடிக்கக்கூடாது என்று கேட்கின்றோம். ஆண்டுதோறும் வரும் லக்ஷக் கணக்கான வருவாய்களை விழலுக் கிறைக்கவா நமது முன்னோர்கள் மானிய ஏற்பாடு செய்துவிட்டுப் போனார்கள்? கிறிஸ்தவர்களின் நல்ல வழிகளைப் பின்பற்றி நமது சமயத் தலைவர்களும் உண்மைச் சமய தருமங்களை நாட்டில் பரப்ப முயன்றால் தெய்வங்களின் பேரால் நிகழும் நரபலி—உயிர்ப்பலிக் கொடுமைகள் போன்றவை இங்கே தலைகாட்டுமா? வேலாயுதப் படையாச்சி குடும்ப ஆவேசங்கள் நமது சமயத் தலைவர்களையும் மக்களையும் தட்டியெழுப்பி விழிக்கச் செய்ய வேண்டும் என்று விரும்புகின்றோம். ஓம் தத் ஸத்.




# கொம்பார் சோலைக் குயில்

(ரா. பி. சேதுப் பிள்ளை, பி.ஏ., பி. எல்.)

ஐம்பொறிகளால் இயற்கை இன்பத்தை ஆரத்துய்த்த அருந்தமிழ் மக்கள், புலன்வகை அறிந்தவல்லோராய் வாழ்ந்து வந்தார்கள். பூவார் சோலையில் மயில்கள் ஆடும் அழகினைக் கண்டும் குயில்கள் கூவும் ஒலியினைக் கேட்டும், தேனொழுகு தீங்கனிகளை உண்டும், நறுமலர்களின் மணத்தை நுகர்ந்தும், மெல்லிய பூங்காற்றின் இனிமையில் தோய்ந்தும், இயற்கையோ டிசைந்து இனிது வாழ்ந்தார்கள். இளவேனிற் பருவத்தில் மெல்லிய தென்றல் நல்மணம் கமழும் மலைச்சாரலில், பூந்தளிர் நிறைந்த தேன்பழச் சோலையில் மறைந்து நின்று கூவும் குயிலின் குரல் எல்லையற்ற இன்பம் பயக்கும் என்பதில் ஐயமில்லை. இதனாலேயே இயற்கை இன்பம் துய்த்த இன்கவிச்செல்வர் இனிய குரலமைந்த குயிலைத் தம் இயற்கவிகளில் அமைத்து இன்புறுகின்றார்கள்.

இயற்கை இனிமையில் இறைவனது இனிமையை அறிந்த மணிவாசகப் பெருமான், மண்ணுலகில் வாழும் இன்னுயிர்களை இறைவன்பால் உய்க்கும் பெருங்கருணை வள்ளலாய் விளங்குகின்றார். தீங்கனிகள் நிறைந்து அசைந்தாடும் பூஞ்சோலையில் இனிய குரலோடு கூவி இன்புறும் குயிலை நோக்கி அப் பெருமான் கூறும் இன்னுரை அன்பில் விளைந்த ஆரமுதமாகும்.

“தேன்பழச் சோலைபயிலும் சிறுகுயிலே இதுகேள் நீ
வான் பழித்திம்மண் புகுந்து மனிதரை யாட்கொண்ட வள்ளல்
ஊன் பழித்துள்ளம் புகுந்து என் உணர்வதுவாய் ஒருத்தன்
மான் பழித்தாண்ட மென்னோக்கி மணாளனை நீ வரக்கூவாய்.”

என்று மணிவாசகர் அருளிய திருவாசகம், தெய்வத தமிழ்மணம் கமழ்வதாகும். ‘தேன்பழச் சோலையில் அமர்ந்து’ தேனொழுகப் பாடும் தீங்குயிலே! இம்மாநிலத்தில் வாழும் மன்னுயிர்பால் வைத்த பேரருளால் எம் இறைவன் கால் தரைதோய நின்று கண்ணுக்கும் எளியனானான். அவ்வள்ளல் என்னுள்ளம் புகுந்து என் உணர்வுக்கு உணர்வாய் ஒளிர்கின்றான். அப்பெருமானது

பெருமையை நினைந்து நினைந்து அவனையே கூவி அழைப்பாய்" என்று சிறு குயிலை நோக்கிக் கூறும் வாயிலாக மணிவாசகர் தம் மனத்தில் அமைந்த அன்பின் பெருக்கை அழகிய மொழிகளால் அருளிப் போந்தார்.

இவ்வாறு தன்னைத் தண்ணளியால் ஆட்கொண்ட பெருந்தகை சின்னம் சிறு குயிலையும் அன்பினால் ஆதரித்து அருள் செய்வான் என்று மணிவாசகர் கூறும் மணிமொழிகள் இறைவனது எல்லையற்ற பேரருளை இனிது விளக்குகின்றன.

"இன்பம் தருவன் குயிலே, ஏழுலகும் முழுதாளி
அன்பன் அமுதளித்தூறும், ஆனந்தன் வான்வந்ததேவன்
நன்பொன் மணிச்சுவடொத்த, நற்பரிமேல் வருவானைக்
கொம்பின் மிழற்றும் குயிலே கோகழிநாதனைக் கூவாய்"

என்று மணிவாசகர் கூறும் மொழிகளில் செந்தமிழ் மணம் கமழ்கின்றது. "கொம்பார் சோலையில் கூவும் குயிலே! மும்மைசால் உலகுக்கெல்லாம் முதல்வனாய பெருமானை, அன்பின் கனி என்றும் அமுதின் சுவை என்றும், ஆனந்த வடிவென்றும் அறிவாய்! அன்பே வுருவாய அவ்விறைவன் சின்னம் சிறுகுயிலாய உனக்கும் சிறந்த இன்பம் தருவான். ஆதலால் அருங்குயிலே! உன் இனிய குரலால் அப்பெருமானைக் கூவி அழைப்பாய்" என்று எழுந்த திருவாசகம் ஆனந்தத்தேன் சொரியும் அழகு வாய்ந்ததாகும். இன்னும், "இன்பமே வடிவாய இறைவன் அன்பினால் வழிபடும் அடியார்க்கு ஆனந்தம் அளிப்பான் என்பதில் ஏதும் ஐயுறவில்லை. கடல் சூழ்ந்த இலங்கைமா நகரில் மங்கையற் கரசியாய் விளங்கிய மண்டோதரிக்கு அப்பெருமான் பேரருளால் இன்பம் அளித்தான். கற்பின் கொழுந்தாய அம்மங்கை ஈசன்பால் வைத்த இடையறாப் பேரன்பின் பயனாக அப்பெருமானது அடியின்கீழ் அமர்ந்து மாறிலா இன்பத்தில் மகிழும் பேறுபெற்றாள். ஆதலால் அருங்குயிலே! அன்பர்க்கு அருள்செய்யும் பெருமான் வருந்தி அழைத்தால் வாராதிரான்" என்று மணிவாசகர் மணிக்குயிலை நோக்கிக் கூறும் குழைந்த மொழிகள் அவரது இறவாத இன்பஅன்பை எடுத்துரைக்கின்றன.

"ஏர்தரும் ஏழுலகேத்த எவ்வுருவும் தன்னுருவாய்
ஆர்கலிசூழ் தென்இலங்கை அழகமர் வண்டோதரிக்குப்
பேரருளின் பமளித்த பெருந்துறை மேயபிரானைச்
சீரிய வாயாற்குயிலே தென்பாண்டி நாடனைக் கூவாய்."

என்னும் திருவாசகத்தின் தீந்தேன் செந்தமிழ்ச் செவிகளில் நிறைந்து செம்மைசான்ற இன்பம் விளைவிப்பதாகும். "தென்றல் வந்துலாவும் தீம்பழச் சோலையில் வாழும் சிறுகுயிலே! எம்மை ஆளும் இறைவன் கருங்கடல் சூழ்ந்த இலங்கையிற் சென்று அன்பில் சிறந்த மங்கைக்கு அருள் செய்தான்; அவ்வாறு விரிந்து பரந்த கருங்கடல்கடந்து இலங்கையிற்சென்று அருள்செய்த

இறைவன் இச்சோலையில் அமைந்த உனக்கு அருள்செய்தல் அரிதாமோ! அன்பினால் அகம் குழைந்து அழைத்த அம் மங்கைக்கு அருள்செய்த இறைவன் உனக்கும் அருள் செய்வதில் யாதும் ஐயமில்லை. ஆதலால் நீ தமினிய குயிலே! உனது அழகிய வாயால் அவனை வர அழைப்பாய்!" என்று மணிவாசகர் கூறும் பொன்னுரை எண்ணும் தோறும் இன்பம் பயப்பதாகும்.

"இங்ஙனம் நீ வருந்தி அழைக்குங்கால் வரும் இறைவன் உன்னை நயந்து உன் இன்னுயிர் நண்பனாய் அமைவான். மாந்தளிர்ச் சோலையில் உன்னோடு மகிழ்ந்து விளையாடுவான். அச்சோலையில் உன்னோடு இசைந்து கூவுவான். இன்னும் நீ உண்ணுங்கால் உண்டும், உறங்குங்கால் உறங்கியும், உன்னுயிர்த் துணையாய் அமைவான்" என்று மணிவாசகர் அன்பர்க்கு எளிவந்து இன்பம் அளிக்கும் இறைவனது பெருங் கருணையை எடுத்துரைக்கின்றார்.

"உன்னை உகப்பன் குயிலே உன் துணைத் தோழியுமாவன்
பொன்னை யழித்தநன் மேனிப் புகழில் திகழும் அழகன்
மன்னன் பரிமிசை வந்த வள்ளல் பெருந்துறைமேய
தென்னவன் சேரலன் சோழன் சீர்ப்புயங்கன் வரக்கூவாய்"

என்று மணிவாசகர் அருளும் மணிமொழிகள் மனத்தை மகிழ்விப்பனவாம். அருமையாய்க் கூவும் சிறுகுயிலே! நீயோ கருநீலக்கனிபோல் திகழ்கின்றாய். என்னையாளும் இறைவன் பொன்னினும் அழகிய நன்மேனியோடு இலங்குகின்றான். அவன் அழகிய மேனியைக்கண்டால் நீ இன்னும் மதுரமாய் மகிழ்ந்து பாடுவாய். அத்தகைய பெருமானை ஆர்வமுற அழைப்பாய்' என்று மணிவாசகர் ஈசனது அழகொழுகுந் திருமேனியின் ஒளியைக் குயிலுக்கு உணர்த்தி மகிழ்ந்தார். இறைவனது இணையற்ற பேரழகினைக்கண்ட பெரியார், அவ்வழகிய ஒளி உருவத்தைத் தம் உள்ளத்தில் ஓர் உயிர் ஓவியமாக எழுதி மகிழ்வது இயல்பாகும். இந்திர நீலம்போல் இருண்ட சடையும், குனித்த புருவமும், கொவ்வைச் செவ்வாயும், பவளமேனியும், பால் வெண்ணீறும், பங்கய பாதமும் காணப்பெற்றார், அப்பேரழகினை நினைந்து, நினைந்து நெஞ்சம் தழைத்தல் இயல்பேயன்றோ? இத்தகைய அழகொழுகும் காட்சியைக் கண்ட ஆன்றோர்.

"குனித்த புருவமுங் கொவ்வைச் செவ்வாயிற் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போன் மேனியிற்பால் வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்த பொற்பாதமுங் காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே யிந்த மாநிலத்தே."

என்று ஆனந்த வெள்ளத்தில் ஆழ்ந்தார்கள். பிறந்தோர் உறுவது பெருகிய துன்பமே என்றும், பிறவாமையே பேரின்பமென்றும், உணர்ந்து பிறவாநெறியை விழைந்துறவோரும் பேரழகு வாய்ந்த இறைவனைக் கண்ணெதிரே காட்டிய பிறவியை விருப்புடன் வாழ்த்தும் பாண்மை அறிந்து

மகிழ்தற் குரியதாகும். இவ்வாறே பொன்னார்மேனிப் புனிதனது பொங்கு பேரழகினைக்கண்ட மணிவாசகப் பெருமான் அம்மேனியின் ஒளியை நினைந்து நினைந்து உருகும் தன்மை திருவாசகத்தில் இனிது விளங்கக் காணலாம்.

இன்னும் காருலாஞ் சோலையிற் களித்து வாழும் கருங்குயிலை நோக்கி எழிலார்ந்த இறைவனது அழகினை மணிவாசகர் எடுத்துரைக்கும் மாண்பு மிக்க திகழ்வதாகும்.

"காருடைப் பொன்திகழ் மேனிக் கடிபொழில் வாழுங்குயிலே
சீருடைச் செங்கமலத்தில் திகழுருவாகிய செல்வன்
பாரிடைப் பாதங்கள் காட்டிப் பாசமறுத் தெனையாண்ட
ஆருடை அம்பொனின் மேனி அமுதினை நீவரக்கூவாய்."

என்று அடிகள் அருளிய திருவாசகம் இறைவனது அருளின் திறத்தை இனிதாக எடுத்துரைக்கக் காணலாம். மன்னுயிர்பால் வைத்த மாசற்ற அன்பினால் ஈசன் இம்மாநிலத்தில் தோன்றி, மன்னுயிரைப்பற்றியபாசம் அறுத்துப் பேரின்பம் அளிக்கும் பெருமையை மணிவாசகர் நிறைந்த மொழிகளால் எடுத்துரைத்தார். இவ்வாறு பாசம் அறுத்து இறவாத இன்பம் அளிக்கும் இறைவனை "அமுதம்" என்னும் அழகிய சொல்லால் அடிகள் அமைத்தருளினார். மணம் கமழும் பொழில்களில் வாழ்ந்து, நிழல் செறிந்த சோலைகளில் உறைந்து, தென்றலில் துவளும் தேமாந்தளிர் அருந்தி, இயற்கை இன்பம் நுகரும் நீலநிறக் குயிலை நோக்கி, "இன்பக்குயிலே! செந்தளிர் நிறைந்த இச்சோலை முற்றி முதிர்ந்து பின் உதிர்ந்து விடும். தீஞ்சுவை பயக்கும் இத்தேன் பழச்சோலையும் பழுத்து வீழ்ந்து விடும், அன்றியும் தேமாவின் தீங்கனி பசியைச் சிறிது ஆற்றுமே அன்றி மாற்றமாட்டாது. எம் இறைவனே பசிநோயை மாற்றுவான்; பிறவிப் பெருநோயை அகற்றுவான்; என்றும் அழியாத இன்பம் அளிப்பான்; பிறப்பென்னும் பேதைமையை நீக்கி, இறப்பென்னும் பிணிஅகற்றி இன்பம் அளிப்பான். பேரின்பவடிவாய இறைவனுடன் கலந்து நீ மகிழவேண்டுமாயின் அமுதம்போல் இனிக்கும் அவ்விறைவனை உன் அழகிய வாயால் கூவி அழைப்பாய்" என்று பேரின்ப வாழ்விற்குப் பெருநெறிகாட்டும் மணிவாசகரது அன்பு எல்லையற்றதாய் இலங்கக் காணலாம்.

இவ்வாறு சிற்றறிவு வாய்ந்த சின்னஞ் சிறு குயில்களையும் இறைவன்பால் உய்க்கும் மணிவாசகரது மனப்பான்மையை ஆராயும் பொழுது ஆறறிவு பெற்ற மக்கள் உய்தற்குரிய உயரிய நெறியைச் சொல்லாமற் சொல்லி அருளிய அப்பெரியாரது செம்மை இனிது விளங்குவதாகும். இருள் செறிந்த சோலைகளில் இசைபாடும் சிறுகுயில் இறைவனது புகழைப்பாடி இன்புறுமாயின் மக்களாய்ப் பிறந்தோர்க்கு ஈசனை நினைக்க நெஞ்சுண்டு, பாடப் பண்ணார்ந்த தமிழுண்டு; இத்தகைய அருந்தமிழ் மலர்களை எடுத்து, அன்பெனும் நாரில் தொடுத்து இறைவனுக்கு ஆரமாய் அணிதல் எளிதன்றோ? அன்பெனும் நாரில் அருந்தமிழ் மாலை புனைந்தேத்தும் ஆன்றோர் பைந்தமிழின் பயனாய் விளங்கும் இறைவனுடன் இரண்டறக் கலந்து இன்புறுதல் எளிதாகுமென்று மணிவாசகர் திருவாசகம் மாண்புற உணர்த்துகின்றது.



# உள்ள நூல்

திரு. மா. பாலசுப்பிரமணியம், பீ. ஏ.

## முன்னுரை.

மனிதனுடைய வாழ்க்கை மூன்று வகைப்படும். அம் மூவகை வாழ்க்கைகளாவன உடல் வாழ்க்கை, உள்ள வாழ்க்கை, உயிர் வாழ்க்கை என்பன. அவைகளைப் பற்றிக் கூறும் நூல்கள் முறையே, 'உடல் நூல்' 'உள்ள நூல்' 'உயிர் நூல்' எனப்படும். ஆங்கில மொழியில் அவைகள் முறையே 'பிஸியாலஜி' (Physiology), 'ஸைகாலஜி' (Psychology) 'ஸையன்ஸ் ஆப் ஸ்பிரிசுயாலடி' (Scionce of Spirituality) என்று சொல்லப்படுகின்றன.

இக்காலத்தில் நம் தமிழ் மொழியில் இம் மூவகை நூல்களும் தனித் தனியாக வழக்காற்றில் இல்லை. பழைய தமிழ் வைத்திய நூல்களில் இறந்தவை போக இருப்பன சிலவற்றுள் உடலின் தொழின்முறை பற்றிய சில உண்மைகள் ஆங்காங்கு இருக்கின்றனவேயொழிபத் தனித்த "உடல் நூல்" அல்லது "உடல் தொழில் நூல்" தமிழ் மொழியில் இல்லை. அவ்வாறே தமிழ்ச் சமய நூல்களில் உள்ளத்தைப் பற்றிய சில குறிப்புக்கள் காணப்படுகின்றனவேயொழிய தனித்து "உள்ள நூல்" ஒன்றேனும் கிடையாது. உயிரைப் பற்றிய குறிப்புக்கள் சமய நூல்களில் சிதறிக் கிடக்கின்றனவேனும், தனிப்பட்ட "உயிர் நூல்" தமிழ் மொழியில் இல்லையென்றே தெரிகின்றது.

தமிழ் நாடும் தமிழ்க் கலையும் சிறந்து விளங்கவேண்டுமானால் இம்மூன்று நூல்களும் தமிழ் மொழியில் அமைக்கப்பட வேண்டும். எனவே, இம்மூன்று நூல்களில் ஒன்றாகிய உள்ள நூலை, எளிய முறையில் எழுதத் துணிந்துள்ளேன். இதில் குற்றங்கள் இருப்பின் பெரியோர்கள் அவைகளைப் புறக்கணித்து நலங்களையே கொள்வார்கள் என்று நம்புகின்றேன். பரம்பொருளாகிய கடவுள் சிறியனாகிய என்னை இப்பணியில் ஊக்கியருளுமாறு அவரை வழுத்துகின்றேன்.

### தோற்றுவாய்

இவ்வுள்ள நூலில் நாம் கற்கவேண்டிய பொருள்கள் பலவுள. இது சிறு நூலாதலின் இங்கு சில பொருள்களைப் பற்றிய ஆராய்ச்சியே எடுத்துக்கொள்ளப்படும். ஒவ்வொரு பொருளாராய்ச்சியும் ஒவ்வொரு இயலாக அமைக்கப்படும். முதலில் "அறிவியல்" தொடங்கப்படுகின்றது.

### அறிவியல் (Intelligence)

அறிவு என்னும் சொல் இவ்விடத்தில் எப்பொருளில் பயன்படுத்தப்படுகிறது என்று முதலில் ஆராயவேண்டும். நம் தமிழ் மொழியில் அறிவு என்னும் சொல் புலனையும் ஆன்மாவையும் பகுத்தறிவையும் கடவுளையும் குறிக்கும். 'ஓர் அறிவு உயிர்' 'ஆறு அறிவு உயிர்' என்பன போன்ற சொற்

ருடர்களில் அறிவு என்னும் சொல் புலனறிவைக் குறிக்கும். "அறிவுகாண் ஆன்மாத்தானே" என்பதுபோன்ற இடங்களில் அச்சொல் ஆன்மாவைக் குறிக்கும். பொதுப்பட்ட பேச்சு முறையில் அறிவு என்பது பகுத்தறிவைக் குறிக்கும், சிற்சில இடங்களில் அறிவு என்னும் சொல் கடவுளையும் குறித்து வழங்கப்பட்டிருக்கின்றது. எடுத்துக்காட்டாகத் தாயுமானாருடைய "அரும்பொனே" என்னும் முதற் குறிப்புள்ள பாட்டில் "அன்பான அறிவே" என்னும் தொடரில் வரும் அறிவு என்னும் சொல் கடவுளைக் குறிக்கின்றது. ஆனால் இவ்விடத்தில் அது பகுத்தறிவைச் சுட்டுகின்றது. ஆங்கில மொழியில் அது "இண்டெலிஜன்ஸ்" என்று சொல்லப்படுகின்றது.

எண்ணரிய பல பிறவிகளில் மானிடப் பிறவி தான் அறிவில் சிறந்தது. அச்சிறப்பு அதனுடைய இயற்கைத் தன்மையால் உண்டானது. தவளைப் பிறவியைவிட எலிப் பிறவிக்கும், எலிப் பிறவியைவிட நாய்ப் பிறவிக்கும், அதனைவிட குரங்குப் பிறவிக்கும், அதனைவிட மானிடப் பிறவிக்கும் அறிவு அதிகம். ஆனால் பிறப்பால் எலியாக யிருந்தாலும் எல்லா எலிகளுக்கும் அறிவு ஒரே அளவாக இல்லை. அவ்வாறே பிறவியினால் மக்களாயினும் எல்லா மக்களுக்கும் அறிவு ஒரே அளவில் இருப்பதில்லை ஒரு பிறப்பின்பாற்பட்ட உயிர்களுள் ஒன்றற்கொன்று அறிவு ஏற்றத் தாழ்வு நேர்வது எக்காரணம் பற்றி? வரன் முறையின் பயனாகவா? அல்லது சுற்றத்தின் பயனாகவா? என்பதுபோன்ற கேள்விகளுக்கு விடை கொடுக்க நாம் முயற்சிக்க வேண்டும். முதலில் நாம் அறிவை அளக்கும் வழியைத் தெரிந்துகொள்ள வேண்டும். அப்பொழுது அறிவின் உண்மையான தன்மையையும் நாம் அறிந்தவர்களாவோம்.

### அறிவளவை (Intelligence Test)

ஒருவனுடைய அறிவை நாம் அளக்கவேண்டுமானால், அவனுடைய அறிவுக்கும், சராசரி அவ்வயது மனிதனுடைய அறிவுக்கும் உள்ள அளவை அறிய வேண்டும். எடுத்துக்காட்டாக, மூன்று வயதுடைய ஒரு குழந்தையைக் கவனிப்போம். அந்தக் குழந்தைக்குச் சில பழக்கமான பொருள்களைக் காட்டி, அவைகளின் பெயர்களைக் கூறுமாறு நாம் கேட்டால், அக்குழந்தை ஐந்துக்கு மூன்று வீதம் பொருள்களின் பெயர்களைக் கூறினால் அது சராசரி மூன்று வயதுக் குழந்தையின் அறிவைப் பெற்றிருக்கின்றது என்று கூறலாம். எப்பொழுதெனில், அவ்வயதுடைய பல குழந்தைகள் அதே பொருள்களில் ஐந்துக்கு மூன்று வீதம் சரியான பெயர்களைக் கூறி யிருப்பின். அவ்வாறே, பத்து வயதுடைய பிள்ளையின் அறிவை நாம் அளக்கவேண்டுமாயின் அவ்வயதுடைய பல பிள்ளைகளை நாம் முன்னரே ஆராய்ந்து ஒரு சராசரி திட்டத்தை அமைத்து வைத்திருக்க வேண்டும். எடுத்துக்காட்டாக மேலே, சில திட்டங்களைக் குறிப்பிடுவோம்.

(1) மூன்று வயதுக் குழந்தைகள்: பெயர் கூறும் ஆராய்ச்சி:—5-தெரிந்த பொருள்களில் 3 பெயர்களைக் கூறவேண்டும்.

(2) ஆறு வயதுப் பிள்ளைகள்: படக் குற்றங் கூறும் ஆராய்ச்சி:—4-குற்றமுள்ள படங்களில் 3 படங்களின் குற்றங்களைக் காட்டவேண்டும்.

(3) எட்டு வயதுப் பிள்ளைகள்: உவமை கூறும் ஆராய்ச்சி:—கட்டையும் அதன் கரியும் எவ்வகையில் ஒத்திருக்கின்றன? என்பதுபோன்ற கேள்விகள்—4-கேள்விகளுக்கு 2 சரியான விடைகள் கூறவேண்டும்.

(4) பன்னிரண்டு வயதுப் பிள்ளைகள்: சொற்பொருள் கூறும் ஆராய்ச்சி:— 100 சொற்களில் 40 சொற்களுக்கேனும் சரியான பொருள் கூறவேண்டும்.

## உள்ள வயது—Mental Age

12 வயதுள்ள ஒரு சிறுவனுடைய அறிவை மேற்காட்டிய அறிவளவைத் திட்டத்தால் ஆராயும்பொழுது, அது சராசரி 10 வயதுள்ள சிறுவனது அறிவை ஒத்திருந்தால், அச்சிறுவனுக்கு உள்ள வயது 10 என்று சொல்லப்படும். அவ்வாறே 8 வயதுள்ள ஒரு சிறுவன் 10 வயதுள்ள சிறுவனுடைய அறிவைப் பெற்றிருந்தால் அவனுடைய உள்ள வயது 10 என்று சொல்லப்படும். முதலில் பேசப்பட்ட சிறுவன் மந்தன் என்றும், இரண்டாவதாகப் பேசப்பட்ட சிறுவன் சூரியன் என்றும் சொல்லப்படுவார்கள். தன்னுடைய உடல் வயதும் உள்ள வயதும் ஒத்துள்ள ஒருவன் சராசரி அறிவுள்ளவன் என்று பேசப்படுவான்.

## அறிவு எண்—Intelligence Quotient

ஒருவனுடைய உள்ள வயதை உடல் வயதால் வகுத்தால், பெறப்படும் எண் அறிவு எண் என்று சொல்லப்படும். இது இங்கிலீஷ் மொழியில் இண்டெலிஜன்ஸ் கோஷண்ட் (Intelligence Quotient) என்று வழங்கப்படும். 12 உடல் வயதுள்ளவன் 12 உள்ள வயதுடையவனுல் அவனது அறிவு எண் $\frac{12}{12}=1$. 10 உடல் வயதுள்ளவன் 12 உள்ள வயதுடையவனுல் அவனது அறிவு எண் $\frac{12}{10}=\frac{6}{5}$. 12 உடல் வயதுள்ளவன் 10 உள்ள வயதுடையவனுல் அவனது அறிவு எண் $\frac{10}{12}=\frac{5}{6}$.

இவ்வாறு, ஒருவனுடைய உள்ள வயது அவனுடைய அறிவின் அளவையும், ஒருவனுடைய அறிவு எண் அவனுடைய சராசரிக்கு மேற்பட்ட அல்லது குறைபட்ட அறிவின் அளவையும் காட்டுகின்றன.

## தொழிலளவை—Performance Tests

ஒரு சிறுவனுடைய அறிவை தொழிலாலும் அறியலாம். ஒரு மரப் பலகையில் பல தொளைகள் இருக்கின்றன. அவைகள் வட்டமாகவும், முக்கோணமாகவும், நாற்கோணமாகவும், ஐங்கோணமாகவும்—இன்னும் பல வடிவங்களாகவும் இருக்கின்றன. அவைகளுக்கு ஏற்ற மரஉருவங்கள் ஒரு பெட்டியில் வைக்கப்பட்டிருக்கின்றன. ஒரு சிறுவன் அவ்வுருவங்களைத் தொளைகளில் பொருந்தும்படியாகக் கூறப்படுகிறான், அவ்வாறு அவன் செய்வதற்கு எவ்வளவுநேரம் ஆகின்றது என்பதையும், அவ்வேலையில் அவன் எவ்வளவு தவறுகள் செய்கின்றான் என்பதையும் நாம் கவனிக்கவேண்டும். தவறுகளாவன, வட்டமான தொளையில் முக்கோணமான பொருளைப் பொருத்த முயலுதல் முதலியன. இவ்வாறு பல வயதுள்ள பல சிறுவர்களை ஆராய்ந்து ஒவ்வொரு வயதுக்கும் ஒவ்வொரு கால அளவையும், தவறு எண்ணிக்கை அளவையும் சராசரியாக நாம் அமைத்துக்கொள்ளவேண்டும். இப்பொழுது; ஒரு குறிப்பிட்ட சிறுவனை நாம் கவனிக்க வேண்டின், அவனை இவ்வேலையைச் செய்யுமாறு கூறவேண்டும். அவனுடைய கால அளவையும் தவறு எண்ணிக்கையையும் தெரிந்துகொள்ளவேண்டும். பிறகு, நாம் முன்னரே தயாரித்து வைத்துள்ள அமைப்புக்களில், இச்சிறுவனுக்குரிய வயது முறையோடு இவனது கால அளவையும் தவறு எண்ணிக்கையையும் நாம் ஒப்பிட்டுப் பார்த்து, இவனது அறிவின் ஏற்றத் தாழ்வுகளை அறியலாம்.

# புராணப் புதையல்கள்

(வீ. சங்கர ஐயர்.)

புராணங்கள் 18. அவைகளாவன:—

| | | | |
|---|---|---|---|
| 1. | பிரம்ம புராணம் | கிரந்தங்கள் | 10,000 |
| 2. | பத்ம புராணம் | ஷை | 55,000 |
| 3. | விஷ்ணு புராணம் | ஷை | 23,000 |
| 4. | சிவபுராணம் | ஷை | 24,000 |
| 5. | பாகவதம் | ஷை | 18,000 |
| 6. | நாரத புராணம் | ஷை | 25,000 |
| 7. | மார்க்கண்டேய புராணம் | ஷை | 9,000 |
| 8. | ஆக்கினேய புராணம் | ஷை | 15,400 |
| 9. | பவிஷ்ய புராணம் | ஷை | 14,500 |
| 10. | பிரம்ம வைவர்த்த புராணம் | ஷை | 18,000 |
| 11. | லிங்க புராணம் | ஷை | 11,000 |
| 12. | வராஹ புராணம் | ஷை | 24,000 |
| 13. | ஸ்காந்த புராணம் | ஷை | 81,100 |
| 14. | வாமன புராணம் | ஷை | 10,000 |
| 15. | கௌர்ம புராணம் | ஷை | 17,000 |
| 16. | மத்ஸ்ய புராணம் | ஷை | 14,000 |
| 17. | காருட (ஸௌபர்ண) புராணம் | ஷை | 19,000 |
| 18. | பிரம்மாண்ட புராணம் | ஷை | 12,000 |
| | | மொத்தம் ஷை | 40,0000 |

புராணத்தில் ஸர்க்கம், பிரதி ஸர்க்கம், வம்சம், மந்வந்தரங்கள், வம்சானு சரிதம் என்ற எட்டு லக்ஷணங்களும் அடங்கியிருக்க வேண்டும். பிரஜைக ளுக்கு தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் ஆகிய இந்நான்கு புருஷார்த்தங் களை உபதேசம் செய்து அவர்களை நல்ல நடத்தை யுள்ளவர்களாகச் செய்வதற் காகவே புராணங்கள் மஹரிஷிகளால் கதைகளாக எழுதப்பட்டிருக்கின்றன. ஸத்குணங்களை யுடைய கதாநாயகர்களுக்கு நன்மையும், துர்க்குணமுடைய கதாநாயகர்களுக்குத் தீமையும் பலனாகக் கிடைத்திருப்பதையும் நமக்கு புரா

ணங்கள் ரூபிக்கின்றன. ஆகையால் நாம் துர்க்குண ரஹிதராகவும், ஸத்குண ஸஹிதராகவும் இருக்கவேண்டுமென்று அவைகள் நமக்கு உபதேசிக்கின்றன.

உதாரணமாக மார்க்கண்டேய புராணத்தை எடுத்துக் கொள்வோம். இதில் சிராத்த கல்பம், ஸதாசார வர்ணனம், ஆத்மவிவேகம், யோக நிரூபணம், யோகஸித்தி, தர்மா தர்ம நிரூபணம், ஓங்கார வர்ணனம், முதலான சாஸ்திர தத்துவங்கள் அடங்கியிருக்கின்றன.

ஹரிச்சந்திரன், சந்திரமதி இவர்களுடைய சரித்திரம் இதிலிருந்துதான் எடுத்து பல கவிவாணர்கள் தங்கள் கைச்சரக்குகளைச் சேர்த்து எழுதியிருக்கின்றனர்.

இப் புராணத்தில் மஹா விஷ்ணு எதற்காக பூமியில் அவதரித்தார். த்ருபத புத்திரியை ஏன் பஞ்சபாண்டவர்கள் விவாஹம் செய்துகொண்டார்கள். பலராமர் பிரம்மஹத்தி சாந்திக்காக தீர்த்த யாத்திரை ஏன் செய்தார்? பாஞ்சாலியின் புத்திரர்கள் பஞ்சபாண்டவர்களுடைய சகாயமும் பலமும் இருந்தும் ஏன் கொல்லப்பட்டார்கள் முதலிய சம்சயங்களை நீக்கக்கூடிய விஷயங்கள் அடங்கியிருக்கின்றன. இதிலிருக்கும் மதாலஸோபாக்கியானத்திலிருந்து பிரபஞ்சம் நிஸ்ஸாரமென்றுள்ள அறிவு நமக்கு உண்டாகும். இப் புராணத்தில் ஆசிரம தர்மம், கிருகஸ்த தர்மம், ராஜ தர்மம் இவைகளும் அடங்கியிருக்கின்றன. அநேகர் தினமும் பாராயணம் செய்துவரும், "தேவீ மஹாத்மியம்" என்ற 'சப்த சதி'யும் இப்புராணத்தில் அடங்கியிருக்கின்றன.

தேவீ மகாத்மியத்தில் மஹாவிஷ்ணுவானவர் யோக நித்திரையிலிருக்கும் பொழுது, மது, கைடபர் என்னும் இரு அசுரர்களைக் கொல்லும்படிக்கு, பிரம்மா தேவியைப் பிரார்த்திக்க, தேவி விஷ்ணுவின் சரீரத்திலிருந்து தோன்றி அவர்களைக் கொன்ற கதையை சொல்லப்படுகிறது; பிறகு மஹிஷாஸுரவதமும், சும்ப, நிசும்பவிதமும், சொல்லப்பட்டிருக்கிறது. தேவியின் சரித்திரத்தை ஸ்மரிப்பவனுக்கு நிச்சயமாக ஸகல அரிஷ்டங்களும் தூரத்திலிருந்தே கதிரவனைக் கண்ட பனிபோல் ஓடிவிடுகின்றது என்று தேவியாலேயே கூறப்பட்டிருக்கிறது. இதை மந்திர சாஸ்திரமென்றும் இதை நவராத்திரி காலங்களில் பாராயணம் செய்தால் சகல அரிஷ்டங்களும் விலகுமென்பதும் அனுபவத்தால் அறியலாம்.

## மாயை

பூனையானது தன்னுடைய குட்டியைப் பல்லினாலே கடித்து எடுத்துக்கொண்டு செல்கிறது; அக் குட்டிக்குத் துன்பமே யுண்டாவதில்லை. ஆனல் அதேமாதிரி பூனை வாயிலே ஒரு எலி அகப்பட்டுக்கொண்டால் அவ்வெலி மரித்துவிடுகிறது. அப்படியே மாயையும் எல்லோரையும் அழித்தபொழுதிலும் ஈசுவர பக்தனை மாத்திரம் அழிப்பதில்லை.

ராமகிருஷ்ண பரமஹம்ஸர்—




# விதுரர் விருந்து.

(பண்டித. பூ. ஸ்ரீநிவாசன்.)

இதிகாச ரத்தினமென்றும் ஐந்தாம் வேதம் என்றும் சிறப்பித்துக் கூறப்படும் பாரதத்துள் பல உத்தமசிகாமணிகளின் வரலாறுகளும் சரிதங்களும் விளங்கித் திகழ்கின்றன. பாரத கதையின் மேன்மைக்கு இவைகளே சிறந்த கருவிகளுமாகும். நாரின் இடையிடையே தொடுக்கப்பட்ட மலர்போல் அவ்வுத்தம புருஷர்கள் பாரதத்துள் பிரகாசிக்கின்றனர். அவர்களுள்ளும் தலைசிறந்து விளங்குவோர் பகவான் ஸ்ரீகிருஷ்ணர் பீஷ்மர் விதுரர் யுதிஷ்டிரர் என்பவர்களே யாவர். அவர்களுள் விதுரர் என்பவரின் வரலாற்றைச் சிறிது வரைவாம்.

பீஷ்மரின் மாற்றாந்தாயாகிய சத்தியவதி (பரிமளகந்தி) தன் மகனாகிய விசித்திரவீரியன் விண்ணுல கெய்திய பின்னர் மண்ணாள மக்களின்மையால் வேதவியாச மகரிஷியைக்கொண்டு புத்திரப் பேறடையக்கருதி விசித்தி வீரியன் மனைவிகளாகிய அம்பிகை யென்பாளையும் அம்பாலிகை யென்பாளையும் அதற்கிணங்கச் செய்தனள். அவ்வாறே அம்பிகையும் அம்பாலிகையும் இரு புதல்வரை யீன்றனர். ஆனால் அவர்களுள் முன்னவன் குருடனாகவும் பின்னவன் பாண்டுநோயுடையனாகவும் பிறந்தனர். அவர்களே திருதராட்டிரனும் பாண்டுமன்னனும். இவ்விருவரும் அரசாளும் தன்மையற்றவர்களென் றெண்ணிய சத்தியவதி அம்பிகையால் மற்றோ ரரும்புதல்வனை யளித்தல் வேண்டுமென்றருந்தவ வியாதனை வேண்டினள். ஆனால், அம்பிகை அம்முனிவர் பாலருவருப்புற்றன ளாகலின், தனக்குப் பதிலாகத் தன் தோழியை நன்கலங்கரித் தனுப்பினள். ஆகவே, அவள்பால் ஓர் தனயன் தோன்றினன். அவனே விதுரன். தோழியின்பால் தோன்றினவராகலின் இவ்விதுரர் அரசாளு முரிமை பெறாராயினர். எனினும், அரசகுமாரர்களு ளொருவராகவே மதிக்கப்பட்டு வந்தனர். இவர் இயமதருமனுடைய அமிசமாகப் பிறந்தவ ரென்று பாரதம் பகர்கின்றது. அதன் வரலாற்றையும் சிறிது கூறுவோம்.

மாண்டவியர் என்னும் முனிவரொருவர் ஒரு நகரை யடுத்த சோலையில் பர்ணசாலை யொன்றமைத்துக்கொண்டு தவம் புரிந்து கொண்டிருந்தனர். அப்பொழுது ஒருநாள் கள்வர் சிலர் அரசன தரண்மனையிற் களவாடி யோடிச் செல்வோர் தம்மைக் காவலர் துரத்தி வருவதை யறிந்து பயந்து அம்முனிவரது பன்னசாலையினுட் சென்று பதுங்கி யொளித்தனர். அவர்களைப் பிடிக்க வந்த அரசனேவலர் ஆண்டமர்ந்திருந்த முனிவரை யண்மி வினவ, அவர் ஒன்

றுங் கூறாது சும்மா விருந்தனர். உண்மையில் அவர் அவர்கள் வினவியதை யும் அறியார். தவத்திலிருந்தா ரன்றோ! காவலர் அவ்வுண்மையை யறிந்தன ரேனும் சந்தேகங்கொண்டு உள்ளே நுழைந்து நோக்கிப் பதிவிருந்த கள்வ ரைப்பற்றிச் செல்லும்போது அம்முனிவர் மீதும் ஐயமுற்று அவரையும் அழைத்துச் சென்று அரசன்பால் விடுத்தனர். அரசன் அவரைக் கழு வேற்று மாறு கட்டளை யிட்டனன்.

பின்னர் அவர் 'கள்வரல்லர்; கடுந்தவசியே' என்பதை யறிந்த அவ்வர சன் அம்முனிவரைக் கழுவினின்று மிறக்கி விட்டான். கழுவினின்றும் விடு பட்ட முனிவர் 'எனக்கு இத்துன்பம் எய்தியதன் காரணம் என்ன? எந்தப் பாவத்தால் இது நேர்ந்தது? இவ்வுண்மையை யறியவேண்டு'மென்று நிச் சயித்து எமனிடம் சென்று வினவினார். இயமன் 'சுவாமி! நீர் சிறுபருவத்தில் தும்பி யொன்றைப்பற்றி அதன் வாலில் முள்ளைச் செருகி விட்டீர்கள். அதன் பயனாக இது நேர்ந்தது' என்றான். முனிவர் 'அப்போது எனக்கு வயது என்ன? அறிவுற்றபின் யான் இத்தகைய தவறுகளைச் செய்ததாகத் தெரிய வில்லை. அறியாப் பருவத்தே செய்திருத்தல் வேண்டும். ஆகவே, அப் பொழுது யான் எவ்வளவு வயதுடையவனா யிருந்தேன்? என்று கேட்க 'பத்து வயதில் உன்பால் அக்குற்றம் நிகழ்ந்தது' என்று தருமன் சாற்றினான். 'தருமனே! நன்று நீதறியாக் காலத்திற் செய்த குற்றத்தினிமித்தம் இத் தண்டனை யியற்றுதல் முறையன்றே. பதினான்கு பிராயத்திற்குப் பின் ஆற் றும் பாவச்செயல்களின் பயனை யனுபவிக்கச் செய்தலே முறையாம். அங் ஙனமாக, நீ இங்ஙனம் செய்தாய். ஆதலின் நீ மண்ணுலகத்தில் தாழ்ந்த குலத்திற் சென்று பிறக்கக் கடவை' எனச் சாபமிட்டுச் சென்றார் முனிவர். அதன்படி எமன் இவ்விதுரனாகப் பிறந்தான் என்பது பாரதத்தின் கருத்தாம்.

விதுரர் திருதராட்டிர மன்னனுக்கு அமைச்சனா யமர்த்தப்பட்டார். இவர் தோழியின் வயிற்றிற் பிறந்தவரென்று முதலிற் சொல்லப்படினும், துரியோ தனன் இவர் வேசியின் மகனென்று கூறுகிறான். 'விலைமாதர்கள் முதலில் தங்களுக் கொருவன் பொன்னை மிகுதியாகக் கொடுப்பினும், அதினும் மிகுதி யான திரவியத்தை வேறொருவன் கொடுத்தால் அவனிடமே அன்பு காட்டு வர். அத்தகைய பொதுமடந்தையின் வயிற்றுதித்தோ னல்லனோ இவ்விது ரன்!' என்று துரியோதனன் இழித்துரைக்கிறான். ஆகலின் விதுரர் ராஜ ஸ்திரீகளிடம் தோழியாயிருந்த ஓர் விலைமாதின் புத்திரர் என்பது அறியக் கிடக்கின்றது.

பாரதகதை முழுவதையும் ஊன்றி நோக்கின் விதுரரது உத்தமகுணம் வெளியாகும். அரசகாரியங்களைத் தம் பிரியத்தின்படி செய்யத் தகுந்த சுதந்தரத்தை இவர்பெற்றிருக்கவில்லை. திருதராட்டிரன் அரசு புரிந்த வரை யில் இவர் செல்வாக்கு மிகுந்திருந்தது. ஆனால் அவன் மகன் அரவக்கொடி யோன் தலையெடுக்கத் தொடங்கியபின் இவரது செல்வாக்கை அவன் ஓங்க விடவில்லை. மந்திரியாக இவர் இருந்தமையின் அவர்கள் சொற்படியே எல் லாக் காரியங்களையும் செய்யவேண்டிய நிலைமையிலிருந்தார். எனினும் தக்க சமயங்களில் அவர்கள் குற்றங்களை யெடுத்துக்காட்டி இடித்துப் புத்திமதி புகட்டுவதில் அவர் சிறிதும் பின் வாங்கியதேயில்லை. 'எது எப்படியாயினும் நமக்கென்ன? அரசன் தயவைச் சம்பாதித்துக்கொண்டு நாம் சுகமாக வாழ லாம்' என்றெண்ணும் துர்க்குணம் அவரிடம் அணுவளவும் இருந்ததே யில்லை.

சமயம்வரின் இடித்துரைப்பார்
தக்கவழி செலச் செய்வார்
இமயவர் தம் உலகுறவும்
இருளுலகம் பகையுமாய்
அமையவறி வுறுத்துவார்.

எனக் கூறப்படுகின்ற ஆன்றோர் இயல்பிற்கேற்ப விதுரர் துரியோதனனுக்கும் அவன் தந்தையாகிய அந்தகனுக்கும் கூறிய புத்திமதிகள் இவ்வளவவ்வள வன்று.

தமது வார்த்தைகளை யேற்றுக்கொண்டு நல்வழிப்படாதவர்களா யிருந்தும் திருதராட்டிரன் முதலியோரை விட்டுப் பிரிய இவர் மனமிசைந்திலர். பிரிந்து போதலென்பது நண்பருக் கேற்ற செயலாகுமேயன்றி மந்திரித் தொழிலை மேற்கொண்டுள்ள தாம் பிரிந்து போதல் போற்றத்தக்க செயலன்றென்பது அவர் கருத்துப் போலும். உத்தமனொருவன் தனது நண்பன் தீய நெறியிற் செல்லுங்கால் அவ்வாறு செல்லவிடாமல் தடுக்கத் தன்னாலான முயற்சிகளை யெல்லாம் செய்தல் வேண்டும். அப்பொழுதும் அவன் திருந்தானாயின் அவனை விட்டுப் பிரிதலே நலமாகும். ஆனால், நம் விதுரரோ அத்தகை நிலையில் இல்லை. பெரிய அரசனோ தமயன். அவனிடத்தில் அமைச்சராயிருந்து அவர் அன்னத்தையுண்ட விதுரர் அறியாமையின் காரணமாக வுண்டாகும் தவறுகளைத் திருத்திக்கொண்டு உடன் உறைதலன்றி கைவிட்டுச் செல்லுதல் தகுதியன்றெனக் கருதியே அவர்களுடன் இருந்திருத்தல் வேண்டும்.

எனினும், ஒருமுறை தம் தமயனை விட்டுச் சென்றும் விட்டார். தாம் கூறிய அறவுரையை அசட்டை செய்ததோடு தம்மையும் கடிந்து பேசிய காரணத்தால் காவலனை வெறுத்துக் கானகமுற்றார். ஆயினும், உடனே தம் முன்னவனாகிய மன்னவன் ஓராளிடத்தில் சொல்லி யனுப்பிய சமாதான வார்த்தைகளைக் கேட்ட வளவில் சினமொழிந்து திரும்பினார். "நீர் கிழிய வெய்தவடுபோல மாறுமே சீரொழுகு சான்றோர் சினம்" என்பது உண்மையுரை யன்றோ ? சகல நற்குணங்களும் ஒருங்கே யமையப்பெற்ற விதுரர் விற்போரில் இணையற்ற வீரர்; அசகாய சூரர். இவர் பாண்டவர்களுக்கு எதிரில் துரியன் பக்கத்தில் நின்று வில்வளைப்பாராயின் அவருடன் சமானமாக நின்று பொரத்தக்க வீரரெவருமிலர் என்பது திண்ணம். அவர் வில்லின் வல்லமைக்கு எதிர் நிற்கத்தக்க வில் விசயனது காண்டீபத்தையன்றிப் பிறிதொன்றில்லை. இராசத்துரோகம் நம்பிக்கைத் துரோகம் முதலிய தீக்குணங்கள் சிறிது மில்லாதவராகலின் விதுரர் துரியன் பக்கலில் நின்று பாண்டவருடன் அமர் புரியுங்கால் அவரை வெல்லுதல் அரிதாகும் என்பதை யறிந்தே பகவான் ஸ்ரீகிருஷ்ணன் தந்திரமாக விதுரர் சண்டைக்குச் செல்லாதவாறு செய்து விட்டனர். அவர் சிறந்த ராஜதந்திரி யன்றோ ?

இதுகாறுங் கழறியவற்றால் விதுரர் இழிகுலத்தாரென்றும், சகல நற்குணங்களும் வாய்ந்தவரென்றும், 'உண்ட வீட்டிற் கிரண்டகம் செய்யலாகாது' என்னும் நீதிமொழியைக் கடைப்பிடித்துச் செஞ்சோற்றுக் கடன் கழிக்கவே எவ்வளவோ நன்மதி கூறியும் ஏற்றுக் கொள்ளாத அரவக்கொடி

யோன்பா லிருந்தனரென்றும், தன்னயஞ் சிறிது மில்லாதவரென்றும், ராச நீதிகளை நன்குணர்ந்தவரென்றும், அமர் புரியும் ஆற்றலில் ஆண்சிங்கம் போன்றவரென்றும் அறிந்தோம்.

இவ்வளவேயோ! அவர் கடவுள் பக்தி மிகுந்தவரென்றும் அந்த பக்திக்கு அடிப்படையான பற்றின்மை (நான் எனது என்னும் அகப்பற்று புறப்பற்றுக்க ளில்லாமை) அவரிடம் அடைந்திருந்தது என்றும் அறியவேண்டியவர்க ளாகின்றேம்.

"அற்றது பற்றெனில் உற்றது வீடு."

"பத்துடை அடியவர்க் கெளியவன்
பிறர்களுக் கரிய வித்தகன்."

என்று நம்மாழ்வார் திருவாய் மலர்ந்தருளியபடி, அவனையே பற்றுகப்பற்றிப் பிறபற்றுக்களை யொழித்த அடியார்களுக்குப் பகவான் எளிதிற் கிடைக்கும் என்பது பெரியோர்களின் அபிப்பிராய மல்லவா?

"பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு."

என்று பொதுமறையும் புகல்கின்றதே.

ஆகவே, அத்தகைய பற்றற்ற தன்மையில் "தாமரையிலைத் தண்ணீர் போல் சகத்தோடுங் கூடி வாழ்ந்து" பகவானிடத்துப் பக்தி பூண்டொழுகிய பரமபாகவத சிரோமணியாகிய விதுரர் பகவானருளைப் பரிபூரணமாகப் பெறுதற்குப் பாத்திரராயிருந்தா ரென்பதில் வியப்பொன்றுமில்லை யல்லவா?

'பார்தரும் கருத்து பாம்புக்கொடியுடைய பார்த்திபனுக்கு உண்டோ இல்லையோ?' என்பதைப் பார்த்துவரும் பொருட்டுப் பாண்டவர்க்காகத் தூது சென்ற பகவானை அத்தின புரியில் ஆன்றோர் பலர் எதிர்கொண்டழைத்துச் சென்றனர். வீடுமர் துரோணர் கிருபர் விதுரர் ஆதியோரே அவர்களுள் முக்கியமானவர்கள். அரசவீதியில் செல்லும்போது அரிவாசுதேவன் ஆகாயத்தை யளாவும்படி உயர்ந்திருந்த மாடமாளிகைகளைக் கண்ணுற்று 'இது யாருடையது? இது யாருடையது?' என்று கேட்டுக்கொண்டே சென்றபொழுது, அருகிற் செல்வோர் 'இது என்னுடையது' 'இது என்னுடையது' என்று இயம்பிக் கொண்டே சென்றனர். அவ்வாறு செல்லுங்கால் விதுரர் வீடு வந்தது. அதனையும் அப்படியே கேட்டார் கிருஷ்ணன். அப்போது விதுரர் எதிரில் நின்று 'பெருமானே! இது தங்களுடைய திருமாளிகை' என்று பணிவுடன் பகர்ந்தனர். அவ்வளவில் பகவான் அங்கேதானே நின்று 'அப்படியா! இந்த நகரத்திலும் எனக்கொரு வீடு இருக்கின்றதா? அவ்வாறாயின் யான் இங்கேதானே தங்குகின்றேன்' எனச் சாற்றி தம்முடன் வந்தோரனைவரையும் விடை கொடுத்தனுப்பி உள்ளே சென்றார்.

இவ்விடத்தில் விதுரரது பற்றற்ற தன்மை நன்கு புலப்படுகின்றது. மற்றவர்களெல்லோரும் 'எனது எனது' என்று சொன்னதுபோல் விதுரர் ஏன் சொல்லவில்லை! 'மமதை' அவரிடம் இல்லாமையே அதற்குக் காரண மென்பதைத் தவிர வேறென்ன காரணம் சொல்வது! மமதை இல்லாமலிருக்க

வேண்டுமானல் அகந்தை இல்லாமலிருக்க வேண்டும். 'நான்' என்னும் அகந்தை யிருக்கு மிடத்தில்தான் 'எனது' என்னும் மமதையும் மாறுது குடி கொண்டிருக்கும். அகந்தை யொழிந்த விடத்துத்தான் அதன் காரணமா யுண்டாகும் மமதையும் ஒழியும். இது நோக்கியே தாயுமானுரும்,

"எத்தனை விதங்கள்தான் கற்கினும் கேட்கினும் என்
இதயமு மொடுங்கவில்லை
யான் என்னும் அகந்தைதான் எள்ளளவு மாறவில்லை
யாதினு மபிமானம் என்
சித்தமிசை குடிகொண்டது."

என்று புகன்ருர்.

அத்தகைய பற்றற்ற விடமே பகவான் குடிகொள்ளுதற் கேற்ற விடமாம் என்பதே ஆன்ருேர் துணிபாகலின், பகவான் விதுரரிடத்திலே தங்கினுர். அஃதன்ருே அவர் தங்குதற்குரிய விடம்! அதைத் தவிர வேறிடம் ஏது?

பகவான் தம் வீட்டுக்கு விருந்தாளியாய் வந்தார் என்பதை நினைக்குந்தோறும் ஆனந்தக்கடலு ளாழ்ந்து கரையேற வறியாத விதுரர் ஆடினுர், பாடினுர், படியில் விழுந்தார், அடிகளைச் சிரத்திற் சூடினுர். சாவாமருந்தை தேவர்களுக்கருளிய மாயோன் விருந்து வந்தானென் றுருகினுர். "சுவாமி! தேவதேவா! தங்கள் திருவடி பொருந்த இச்சிறு குடிசை என்ன தவம் செய்ததோ! இது தாங்கள் முன்னே கண்வளர்ந்தருளிய பாற்கடலோ! அல்லது சேஷசயனமோ! அல்லது ஆலிலையோ! அல்லது வேதத்தின் ஆதியோ! என்னவென் றிசைப்பேன்" என்று ஆனந்தக் கண்ணீர் பெருக்கினுர். இறப்பையும் பிறப்பையும் ஒழித்தார்.

இவ்வாறு துதித்த பின்னர் பகவான் பசியோடிருப்பாரே என்று நூற்றுக்கணக்கான சமையற்காரரை யழைத்து அறுசுவை யுண்டியை ஆயத்தஞ் செய்யுமாறு ஆஞ்ஞாபித்தார். அதற்குள் பகவான் பக்தராகிய விதுரர்க்கு சதுர்ப்புஜங்களோடு தரிசனந் தரல்வேண்டுமெனத் திருவுளங்கொண்டு "விதுரரே! எனக்குப் பசி மிகுதியா யிருக்கிறது" என்ருர். விதுரர் "சுவாமி! சிறிது பொறுத்தருளவேண்டும். இதோ ஒரு நொடியில் தயாராகி விடும்" என்ருர். பகவான், "இல்லை இல்லை, முடியாது, இப்பொழுதே ஏதேனும் சாப்பிடவேண்டும். நீ சாப்பிடுவதற்காகத் தயாரித்து வைக்கப்பட்டிருக்கும் நொய்க்கஞ்சியையாவது கொண்டுவா" என்று வற்புறுத்தினுர். (விதுரர் நொய்க்கஞ்சியையே உணவாக உபயோகித்து வந்தார் என்கின்றனர்.)

உடனே விதுரர் "சுவாமி! தாங்கள் நொய்க்கஞ்சியையோ உட்கொள்ளுவது!" என்று கூறிக்கொண்டே வாழையிலை யமைத்து அதனில் கஞ்சியை விட்டார். கிருஷ்ணன் அதனைப் புசிக்கத் தொடங்கினுர். அது ஒரு பக்கமாக ஓடத் தொடங்கியது. அந்த மூலையை ஒரு கையால் தூக்கிப் பிடித்தார். மற்ருெருபுறம் ஓடத் தொடங்கியது அந்தக் கஞ்சி. மற்ருெரு கையினுல் அந்த மூலையையும் தூக்கிப் பிடித்தார். மற்ருெரு புறம் போக ஆரம்பித்தது. மற்ருெரு கையை யுண்டாக்கிக்கொண்டு அப்பாகத்தையும் உயர்த்திப் பிடித்

தார். மற்றொரு பக்கத்தில் ஓடியது. இன்னொரு கையை யுண்டாக்கிக் கொண்டு அதனையும் பிடித்துக் கொண்டார். இவ்வாறு நான்கு கைகளாலும் நான்கு மூலைகளையும் பிடித்துக்கொண்டு தலையைச் சாய்த்து வாயால் உறிஞ்சி யுட்கொண்டார்." விதுரரே! இக்கஞ்சியை என்னென்பது! என்னைப் படாதபாடு படுத்திவிட்டது பார்த்தீரா!'' என்று பரிவுடன் கூறினர். விதுரர் சதுர்ப்புஜங்களோடு கூடிய பகவானது திருவடிவைக்கண்டு களித்தார்.

அன்றிரவே அங்குத் தங்கி பகவான் மறுநாள் துரியோதனனிடம் தூது சென்றார்.

இத்துடன் இக்கதையை நிறுத்துவோம். இதனால் நாம் அறிந்து கொள்ள வேண்டியது யாதெனில், பகவானுக்கு சாதிபேதம் சிறிதுமில்லை. அவருக்கு வேண்டியது பக்தியொன்றே யாகும். "இவன் மேல்சாதியான்; இவன்தான் எனக்குகந்தவன்; இவனுக்கே யான் அருள் புரிவேன். இவன் கீழ்ச்சாதியான்; இவன் எனக்குகந்தவனல்லன்; இவனுக்கு நான் அருள் புரியேன்'' என்று சாதி பேதத்தைப் பாராட்டி கடவுள் எவர்க்கும் அருள் புரிவது மில்லை; அருள் புரியாதகற்றுவது மில்லை. அவ்வாறு செய்பவர் கடவுளுமல்ல. ஏனெனில் கடவுளியல் அதுவன்று. பக்தி ஒன்றே அவருக்குப் பிரதானம். பக்தபராதீன னென்பதே கடவுளின் திருநாமம். இவ்வுண்மையை யறியாமல் கடவுள் சம்பந்தப்பட்ட வரையிலுங்கூட சாதிபேதம் பாராட்டுவது அறிவுடையோர் செயலாகா தென்பதே சர்வசாஸ்திர சம்மதமான விஷயம் என்பது விதுரர் வரலாற்றால் நாம் அறிந்துகொள்ள வேண்டியவர்களாகிறோம்.

> ''சாதிபேத மில்லாமல் அன்பரைப் புரப்பவன் நீ
> தானென்பதற்கந்த விதுரன் சாட்சி.''

(குத்தனூர். சின்னசாமி சாஸ்திரிகள்.)

# அண்ணுஸாமியின் அதிர்ஷ்டம்.

பேராசை பெரும் பாவம் என்கிருர்கள். ஆனல் பாவமோ, புண்ணியமோ அதைப் பற்றி நமக்கென்ன தெரியும்? "பாவ புண்ணியங்களேது ?" என்று ஸ்ரீ இராமலிங்கஸ்வாமிகள் கூட சந்தேக ஜன்யமாகப் பாடியிருக்கிருர் அல்லவா ? அதிகமாய் ஆசைப்படுதல் தவறுதான் என்பதை ஒத்துக்கொள்ள நம் கதாநாயகன் மூக்காலமும் தயார். ஏன், அதிர்ஷ்டம் மட்டும் சரியாய் இருந்துவிட்டால் அண்ணுஸாமி என்றுமே ஆசைப்படப் போவதில்லை. அந்த விஷயம் ஏகோதிஷ்டமாய் விட்டதால்தான் அவனை ஆசை பிடித்து வருத்தியது. பி. ஏ. பரீக்ஷையில் தோர்ந்து வருஷம் ஐந்தாகி விட்டது. அதில் இரண்டு வருஷம் சுகவாச ஜீவனமாகவும் கழித்தாய்விட்டது. அன்ன சம்ஹாரமூர்த்தியாய்த் திகழ்ந்த வாழ்வு அலுத்துப்போன நிலைமையில் மாடுதுறை போர்டு பள்ளிக்கூடத்தில் ஐந்தாவது வகுப்பு உபாத்தியாயர் வேலையை ஏற்றுக் கொண்டான். உத்தியோகம் புருஷலக்ஷணம் என்பார்கள். கால சக்கரம் வேகமாகச் சுழன்று கலி முற்றிவரும் இந்நாளில் உத்தியோகம் ஸ்திரீலக்ஷணம், பாசகம் புருஷலக்ஷணமுமாக மாறிவிட்டது. அண்ணுஸாமி பார்த்த உத்தியோகமும் பெயரளவில் புருஷலக்ஷணமாகத்தானிருந்தது. அதற்குமேல் ஏதுவும் கூறுவதற்கில்லை. அவனுக்கு மாதச் சம்பளம் ரூபா 25. அதாவது 25 ரூபாய் என்று பெயர். அந்தத் தொகைக்கு ரிஜிஸ்டரில் கையெழுத்துப் போட்டுவிட்டு 18 ரூபாய் பெற்றுக்கொள்ள வேண்டும். அதிலும் சம்பளம் பட்டுவாடா செய்யும் புண்ணிய புருஷனுக்கு ஒரு ரூபாய் ஸ்வர்ண புஷ்பம் சமர்ப்பித்தாகவேண்டும். ஆகக் கைக்கு வருவது ரூபா 17 தான். அதையும் இரண்டு அல்லது மூன்று மாதங்களுக்கு ஒரு முறை சேர்ந்தாற்போல் பெற்றுக்கொள்ளவேண்டும். வேறு வழியில் ஏதாவது கொஞ்சம் சம்பாதித்துக் கொள்ளலா மென்ருலோ அதற்கும் சாவகாசம் கிடையாது. காலையில் போர்டு பிரிசிடெண்டு வீட்டுக் குழந்தைகளுக்கும் மாலையில் வைஸ் பிரஸிடெண்டு வீட்டுக் குழந்தைகளுக்கும் 'பிரைவேட்' இலவசமாக சொல்லிக் கொடுக்கவேண்டும். இதில் ஏதாவது 'சொஸ்தி' ஏற்பட்டாலோ அவ்வளவுதான். ஒன்று சீட்டுக் கிழிக்கப்பட்டு விடும். அல்லது அண்ணுஸாமி ஏதாவது தண்ணீரில்லாக் காட்டிற்கு மாற்றப்பட்டுவிடுவான். அண்ணுஸாமிக்கு மேலிருப்பவர் அப்பள்ளிக்கூடத்துத் தலைமை உபாத்தியாயர். அவர் இண்டர்மீடியட் பரீக்ஷைக் கோட்டத்தை ஏழு முறை முற்றுகையிட்டு முட்டியடித்தவர். அண்ணுஸாமி பிரதிதினமும் பள்ளிக்கூடம் போகும் பொழுது தலைமை உபாத்தியாயர் வீடு சென்று அவர் மனைவி தயார் செய்துவைத்திருக்கும் அன்னக்காவடியையும் தூக்கிக் கொண்டு செல்லவேண்டும். "யாரைவிட்டதுகாண், விதிவசம், எவரைவிட்டதுகாண்?" என்று தெருவில் புஸ்தக வியாபாரி பாடிக்கொண்டு சென்ருல் அண்ணுஸாமியின் நேத்திரங்களில் கண்ணீர் பெருகிவிடும். "மக்காலே பிரபு

வின் ஆவி மட்டும் கல்லறையிலிருந்து வெளியே வரட்டும். அதன் மண்டையோட்டைச் சுக்கு நூறாக உடைத்துவிடுவேன்'' என்று சிலசமயம் அவன் உன்மத்தன்போல் உளறுவதும் உண்டு. இவ்வாறு அவன் நிலைமையிருக்கையில் ஆசையற்று, உள்ளதைக் கொண்டு திருப்தியடைந்து அவன் வாழவேண்டுமென்று கூற யாருக்குத்தான் மனம் வரும்?

அண்ணாஸாமிக்கு லாட்டரிகளில் சிறிது பைத்தியம் உண்டு. ரங்கநாதர் கோயில் கைங்கரியம், மடாலய பூஜை என்றெல்லாம் கூறி அவனை ஏமாற்ற வேண்டிய அவசியமே இல்லை. பரிசுத் தொகை மீதுதான் அண்ணாஸாமிக்குக் கவனமே யொழிய, பாக்கிப் பணத்தைக் கொண்டு நீங்கள் என்ன செய்தாலும் அவனுக்கென்ன கவலை? ஆக தனது மாத வருமானம் 17 ரூபாயில் நாலைந்து லாட்டரிகளில் செலவழித்துவிடுவான். தனக்கும் ஒரு பரிசுவரும் என்று அவன் எப்படி எதிர்பார்க்கலாம் என்று நீங்கள் கேட்பது நியாயம் தான். அண்ணாஸாமி மீது குற்றமில்லை. அவனுக்கு ஜாதக ரீதியாய் புதையல் கிடைக்கவேண்டுமென்று ஜோஸ்யர்கள் பால்யத்திலேயே சொல்லியிருக்கிறார்களாம். கேந்திரத்திலிருக்கும் கேது மகேந்திர மலையிலிருக்கும் ராகுவைப் பார்த்துக் கண்ணடிப்பதால் சுரேந்திர பதவிக்கு சமதையாய் ஐச்வரியம் கிடைக்குமென்று தைவக்ஞவர, ஜோதிஷரத்ன, அண்ணுவையங்கார் ஸ்வாமி கூறியிருக்கிறார். அரன் வாக்குப் பொய்த்தாலும் அண்ணு வாக்கு பொய்க்குமா?''என்றே மாடுதுறையில் ஒரு பழமொழியும் வழங்கிவருகிறது. ஆகவே பரம நம்பிக்கை கொண்டுதான் அண்ணாஸாமி லாட்டரி சீட்டுகளுக்குப் பணம் கட்டிவந்தான். (அர்த்தப் பிராப்தியோகம் உண்டானால் புதையலாகத்தான் வரவேண்டுமா? லாட்டரி சீட்டும் விழலாமல்லவா?) ''நம்பின பேருக்குத்தான் நடராஜன்'' என்று வேறு சொல்லிக் கொள்ளுகிறீர்கள். அப்பொழுது அண்ணாஸாமியைப் பார்த்து நகைக்க என்ன நியாயம் இருக்கிறது?

* * *

''வெள்ளிக்கிழமை விடிந்த வேளை சரியாயில்லை. என்னமோ தலைகால் தெரியாமல் பித்துப்பிடித்த மாதிரி வளைய வருகிறீர்களே!'' என்று ஆரம்பித்தாள் அண்ணாஸாமியின் ஸஹதர்மசாரிணியான சரஸ்வதியம்மாள்.

பேசாமலிரு. இன்னும் ஒரு பக்கம் சரியாக விடியவில்லை. அதற்குள் உனது அவச் சொல் பாராயணத்திற்கு ஆரம்பித்துவிட்டாயே. இன்றுதான் அஷ்டதரித்திரபுரம் ஆண்டிமடத்திருப்பணிச் சீட்டுக் குலுக்கின விஷயம் பேப்பரில் வருகிறது. நான் கோயிலுக்குப் போய்விட்டு வருகிறேன்.''

அண்ணாஸாமி அன்று தான் வழக்கத்திற்கு மாறாக பிராதஸ்நானம் பண்ணினான். பெற்றோர்களின் திதியன்றுகூடப் பிதிருக்களாக வரிக்கப்பட்ட பூமி தேவர்கள் வந்த பிறகுதான் கிணற்றண்டை போவான். ஸந்தியாவந்தனம் இதற்கு முன் விரதோத்யாபனம் ஆகியிருந்தது. இன்று அதற்கு புனர் ஆரம்பம் நடந்தது. காயத்ரீ மந்திரத்தை அஷ்டோத்திர சஹஸ்ர சங்கியையாக ஜபித்து முடித்துவிட்டு ஆலயம் சென்று அம்பிகைக்கு சஹஸ்ரார்ச்சனை வைத்துவிட்டு லாட்டரிச் சீட்டு விழுந்தால் பத்திரகாளிக்குப் பாலபிஷேகம் செய்வதாகவும் பிரார்த்தித்துக் கொண்டு வீடுவந்து சேர்ந்தான்.

அன்று பள்ளிக்கூடத்தில் அண்ணுஸாமிக்கு ஒன்றும் ஓடவில்லை. ஞாபக மெல்லாம் வேறு எங்கோ இருக்கும் பொழுது இங்கு என்ன செய்ய முடியும். "பூமியின் வடிவம் என்ன?" என்று ஒரு பையனைக் கேட்டான். 'உருண்டை' என்று அவன் 'உளறினதால்,' பாவம் அவனுக்கு நல்ல பிரம்படி கிடைத்தது. மாலையில் ஒரு பையனை அனுப்பி 'ஹிந்து'ப் பத்திரிகையின் பிரதியொன்றை வாங்கிவரச்சொன்னுன். தேவைப் பத்திகளைப்பற்றி அவனுக் கென்ன? பந்தாட்டத்தில் ப்ராட்மென் ஜெயித்தாலென்ன தோற்றுலென்ன? கால் கொள்கை (Leg theory)யைக் கண்டித்து எழுதப்பட்டிருந்ததை அவன் பொருட்படுத்தவில்லை. ஹரிஜன ஆலயப் பிரவேசப் பிரச்னை என்ன வாயிற்று என்று கவனிக்க அவனுக்கு என்ன கர்ம சிரத்தை? கடைசியில் வந்தது லாட்டரிச் சீட்டு விவரம். 11732-ம் நம்பருக்கு மூன்றுவது பரிசு வந்திருந்தது. அதிர்ஷ்டம் வந்தால் அப்படியல்லவா வரவேண்டும். கொடுக்கிற தெய்வம் கூரையையும் பிளந்துகொண்டு கொடுக்குமல்லவா? பரிசு ரூபாய் ஒன்று, இரண்டா? சுளை சுளையாய் மூவாயிரம். இனி இந்த 'டாணு' உத்தியோகம் எதற்கு! பரிசுத் தொகையை வைத்துக்கொண்டு ஐ. சி. எஸ். பரீக்ஷைக்கு ஆஜராகித் தேறிவிட்டால் அப்புறம் ஸப் கலெக்டர், கலெக்டர்...... நிர்வாக சபை அங்கத்தினர், ஒருகால் ஆக்டிங் கவர்னராகக்கூட ஆகலாம். அண்ணுஸாமியின் வாழ்வில் துர்ப்பாக்கியம் அன்றோடு ஒழிந்தது. "படபத்திரகாளி மஹாவரப்பிரசாதி. 'பாலபிஷேகம் எங்கு வரதப்பா?" என்று காத்துக்கொண்டிருக்கிறுள்" என்று ஊரார் சொல்லிவந்த விஷயம் உண்மையாயிற்று என்று அண்ணுஸாமி எண்ணி மகிழ்ந்தான். இவ்வாறு அண்ணுசாமியின் உள்ளம் குளிர்ந்து, முகம் மலர்ந்து, தலைசுழல ஆரம்பிக்கும் வரையில், பாவம், அவன் மாணவர்களுக்கு எமகண்டமாகவே யிருந்தது.

அன்று இரவும் அண்ணுஸாமிக்குப் பக்தி வெள்ளம் பெருக்கெடுத்து ஓடியது. மீண்டும் ஆலய வழிபாடு. இரவு வீட்டில் வடை பாயசத்துடன் மிருஷ்டான்ன போஜனம்.

மறுநாட் காலை. உதயமார்த்தாண்ட பூஜை (காபி)யானவுடன் அண்ணுஸாமி தனது டிக்கட்டை எடுத்துக்கொண்டு சோமு பிள்ளை வீட்டிற்குச் சென்றுன். அஷ்ட தரித்திரபுரம் ஆண்டிமடத் திருப்பணி லாட்டரி சீட்டை மாடுதுறையில் விற்பனை செய்த ஏஜண்டு சோமு பிள்ளைதான். ஆகவே அவரிடம் பரிசுத் தொகையைப் பெறுவதற்கு என்ன செய்யவேண்டும் என்று அவன் புறப்பட்டான்.

"11732 ஏ-க்கு அல்லவா மூன்றுவது பரிசு விழுந்திருக்கிறது. உங்கள் ரசீது 11732 சி. என்ன செய்வது? இருந்தாலும் பாதகமில்லை. உங்களுக்கும் ரூபா 3 பரிசு விழுந்திருக்கிறது" என்று சோமு பிள்ளை கூறிய பொழுது அண்ணுஸாமி இடியுண்ட நாகம்போல் பிரமித்துப் போனுன்.

3000 ரூபாய் எங்கே? 3 ரூபாய் எங்கே? அஜகஜாந்திரம். அல்ல. வித்தியாசம் மூன்று பூஜ்யம் தானே. பூஜ்யத்திற்கு மதிப்பேது?






# ஸ்காட்லந்து ஜனங்களின் ஸ்வதந்தர யுத்தம்.

(T. S. ராஜகோபாலன், B. A., L. T.)

தற்போது கிரேட் பிரிட்டன் என்று அழைக்கப்படும் இங்கிலந்தும் ஸ்காட்லந்தும் வேறான தேசங்கள். வேறான இயற்கையமைப்பும், ஜனங்களும் பழக்கங்களும் மதமும் மனப்போக்கும் உள்ளவை. ஆதி காலந்தொட்டே இரு தேசத்தினருக்கும் நேசப்பான்மை கிடையாது. இங்கிலந்தை விடவும் குறைவான ஆகாரப்பொருள் சாதனமுள்ளதும், அதிகக் குளிரான பிரதேசங்களையுடையதுமான தேசத்து மக்களை இங்கிலந்து வாசிகள் கொள்ளைக்காரர்கள் என்று நினைக்கும்படியும் அலக்ஷியப்படுத்தும்படியும் ஸ்காட் மக்களும் நடைமுறையில் இருந்து வந்தார்கள். ஸ்காட் மக்கள் அடிக்கடி இங்கிலந்தின் மேல் படையெடுப்பதும் அரசன் பலமிழந்தவனானால் கொள்ளையடித்துப்போவதும் பலமுள்ளவனானால் தோற்றோடுவதுமாக இருந்தார்கள்.

இந்த சிலுவை யுத்தத்திற்குச் சென்றிருந்தபோதே ஹென்ரி III இறந்துவிட்டார். அவருடைய குமாரர் எட்வர்டு காரியம் முடிந்து சாவகாசத்துடன் வந்து தன் இராஜ்யத்திற்கு எட்வர்டு I ஆக முடி சூட்டிக்கொண்டார், ஜனப்பிரதிநிதிகள் சபையை ஒழுங்கானதாய்ச் செய்ய இவர் எடுத்துக்கொண்ட முயற்சியும் அந்த விதத்தில் அவர் கூட்டிய பார்லிமெண்டுச்கு மாதிரி பார்லிமெண்டு (Model Parliament) என்று சரித்திரத்தில் பெயர் வந்த விவரமும் முந்தின கதையில் சொல்லப்பட்டது. இந்த ஒரு காரியமே ஜனங்களின் மனதைப் பரவசப்படுத்தியது. ஆனாலும் பிரபுக்களுக்குக் கொஞ்சம் மனத்தாங்கல்தான் எற்பட்டது. அவர்கள் அரசனுக்கஞ்சி அடங்கிக் கிடந்தனர். அதுவும் சகஜமே!

இவர் காலத்தில் நடந்த உள்நாட்டு விஷயம் ஒன்று மிகவும் கவனிக்கத் தக்கது. மாதாக் கோவில்களுக்கும் மடாலயங்களுக்கும், இதர தர்மஸ்தாபனங்களுக்கும், தர்ம சிந்தனையுள்ள அரசர்கள் பிரபுக்கள் செல்வர்கள் நிலங்களை மான்யங்கள் விட்டனர் என்பது பழைய விஷயமாகும். அம்மாதிரி விடப்பட்ட நிலங்கள் நாளடைவில் அதிகமாகி மதஸ்தாபனங்களுக்கெல்லாம் தலைவரான காண்டர்பரி மத குரு மிகுந்த செல்வாக்குடையவரானார். அம்மாதிரியான மான்ய நிலங்களுக்கு மிகக் குறைந்த கிஸ்தி அல்லது கிஸ்தியே யில்லாமலிருப்பது என்ற முறையில் அதிக சௌகரியங்கள் இருந்தன. ஏனெனில் தர்ம ஸ்தாபனங்கள் வெகு ஜன உபகாரமானவை. அவைகளை உபத்திரவிக்கலாகாது என்பது நார்மனிய வெற்றி வீர வில்லியம் போன்ற அரசர்களின் பெருந்தன்மையான நோக்கம். இந்த உரிமையைக் கண்ட பிரபுக்களில்

பலர் தங்கள் தங்கள் நிலங்களைப் பேர் இரவலாக அல்லது போலியாக பொய் யாக ஏதேனும் ஒரு மதஸ்தாபனம் அல்லது மடம் அல்லது மாதா கோவி லுக்கு எழுதி வைத்துவிட்டு தங்கள் நிலங்களுக்குள்ள கிஸ்திகளை வஜா செய்து கொண்டு அப்படி மீதிப்பட்டதில் ஒரு பாகத்தை அந்தந்த ஸ்தாபனங்களுக்கு கொடுத்துவிட்டு மற்ற பாகத்தைத் தாங்களே வைத்துக்கொண்டார்கள். இந்த மாதிரியான திருட்டுக் காரியங்களுக்கு கடவுட் பணி செய்து தர்மஸ்தாபனம் செய்யவந்த மதத் தலைவர்களும் உடந்தையாயிருந்தது விந்தையல்லவா? ஏனெனில் அதிகமான நிலங்கள் அவர்களுக்கு இருந்ததாக ஏற்பட்டது! அவற்றின் மூலம் சொல்ப அதிகப் பொருள் வருவாயும் ஏற்பட்டது! அதுவன்றோ பணத்தின் குணம்! அதன் வலையில் சிக்கி உழலாதார் வெகு சிலரேயன்றோ?

இந்தவிதமாக மதத் தலைவர்கள் செய்த அயோக்யத்தனத்தைக் கண்டு பொருத எட்வர்டு சடுதியில் தன் பார்லிமெண்டைக்கொண்டு "தர்மஸ்தாபனச் சட்டம்" (The Statute of Mortmaine) என்ற ஒரு சட்டத்தை நிறைவேற்றினார். அதன்படி "தர்மஸ்தாபனங்களுக்கு மான்யங்கள் விடுபவர்கள், முன் கூட்டித் தன்னிடம் அறிவித்து இன்ன காரியங்களுக்காக, இன்ன சந்தர்ப்பத்தையொட்டி என்று நிர்ணயப்படுத்திக்கொண்டுதான் செய்ய வேண்டும். அப்படி யில்லாதவரையில் அம்மானியங்கள் சட்டப்படி செல்லாதவை" என்றும், "இந்தப்படியாக இல்லாத முந்தின மான்யங்களும், தகுந்த ஆதாரங்கள் இல்லாதவரையில் அந்தந்த நிலங்கள் அரசனுக்குப் பறிமுதலாகிவிடும்" என்றும் ஏற்பாடு செய்தார். அரசன் பலசாலியானதாலும் பல ஜனங்களுடைய ஆதரவுகளையும் பார்லிமெண்டு மூலம் பெற்றதனாலும் இக்காரியம் அமருக்கு எளிதாக விருந்தது. பிறகு ஜனங்களின் வியாபார சௌகரியங்களையும் நாடி செல்வ அபிவிருத்திக்கு வழி தேடினார்.

இவருடைய காலம் வரையில் இங்கிலந்து அரசர்கள் பெயருக்கு மட்டும் காடு முரடானதும் மேற்கு பாகத்திலுள்ளதுமான வேல்ஸுக்கு அரசர்களாக இருந்தனர். அந்தப் பிரதேசத்து முரட்டு ஜனங்களை யடக்குவதற்கென்றே இங்கிலந்து பிரபுக்களில் Earls of the Marches என்ற ஒரு இனப் பிரபுக்கள் இருந்தனர். அவர்களுடைய வேலை யென்னவெனில் எவ்வகையிலேனும் அந்த முரட்டு ஜனங்களை இம்சித்து அடக்கி வைத்துக்கொள்ள வேண்டும் என்பதாகும். அவர்களுடைய நாடுகள் பூராவும் வேல்ஸின் எல்லையிலேயே கொடுக்கப்பட்டன. இப்போது வேல்ஸ் ஜனங்களை ஒன்றுபடுத்தி ஆங்கிலேயரை அடித்துத் துரத்த லெவல்லின் (Llewellyn) என்ற வேல்ஸ் அரசன் பாடுபட்டான். அவரை சிரமப்பட்டு, முற்றுகையிட்டு, கஷ்டப்படுத்தி, வென்று அடக்கினார் எட்வர்ட் I. ஆனால் வென்ற ஜனங்களை அனுதாபத்துடனேயே நடத்த விரும்பியதால் அந்த சமயத்தில் பிறந்த எட்வர்டு என்ற தன் மகனை வேல்ஸ் இளவரசர் (Prince of Wales) என்று முடி சூட்டினார். இந்த வழக்கம் இன்னும் இருந்து இங்கிலந்து அரசரின் மூத்த மகனுக்குவேல்ஸ் இளவரசர் என்ற பட்டமும் அவர் மனைவிக்கு வேல்ஸ் இளவரசி என்ற பட்டமும் வழங்கி வருகிறது.

இவ்வாறு இங்கிலந்து பூராவும் முதல் முதலாக சேர்த்து ஆண்ட வரசர் எட்வர்டு I தான்! அவருக்கே கிரேட் பிரிட்டன் என்ற பூரா இங்கிலந்துக்கும் ஸ்காட்லந்துக்கும் அரசாகும் சந்தர்ப்பம் வாய்த்தது. அது யெப்படியெ

னில் வெகு காலமாகவே இங்கிலந்துடன் போராடிக்கொண்டு வந்திருக்கும் ஸ்காட் ஜனங்களின் அரசனுன அலெக்ஸாண்டர் என்பவர் நேர் ஆண் வார்சு இல்லாமல் இறந்துபோனுர். அவருக்கு அடுத்தபடி நேர் வார்சாக இருந்தவள் மெய்ட் ஆப் நார்வே (Maid of Norway) என்ற நார்வே தேசத்திய இளவரசி ஒருத்தி. அவளையெப்படியேனும் தன் மகனுக்கு மணம் செய்துவிட்டால் அந்த ஸ்காட்லந்தும் தன் சந்ததியாரைச் சேர்ந்துவிடுமென்று நினைத்திருந்தார். அந்த எண்ணம் பலிக்காதபடி அந்தப் பெண் வரும் வழியிலேயே இறந்தாள். அது தான் தாமதம்! கணக்கற்ற பலர் ஸ்காட்லந்து சிம்மாதனத்துக்குப் போட்டியிடத் தொடங்கினர்! அயல்தேசத் தரசனுன எட்வர்டைக்கொண்டே தங்கள் உரிமைகளைப்பரிசீலனை செய்யச் செய்தனர்! இதுவும் "பழம் நழுவிப் பாலில் விழுந்தது" போலவும் "சர்க்கரைப் பந்தலில் தேன்மாரி பொழிந்தது" போலவும், "தேடப்போன மருந்துக்கொடி காலில் சுற்றியது" போலவும், "கும்பிடப் போன தெய்வம் குறுக்கிட்டது" போலவும் ஆயிற்று இங்கிலந்து அரசன் எட்வர்ட் I க்கு! "வருங்கால் எதுவும் வலிய வரும்" என்பதன்றோ பழமொழி?

நூற்றெட்டுப் பேர்களுக்கு மேலிருந்த வார்சுதாரர்களிலிருந்து எட்வர்டு மூவரைப் பொறுக்கினுர்! அவர்களிலிருந்தும் இருவரை சல்லித்தெடுத்தார்! இந்தச் சமயத்தில் தான் தன்னை எவரொருவர் மேலதிகாரியாகக்கொண்டு கப்பம் கட்ட சம்மதிக்கிருரோ அவரை ஸ்காட்லந்து அரசராக நியமிப்பதாக அவ்விருவரிடமும் தெரிவித்தார். யுத்தம் செய்யாமல் ராஜ்யம் தந்திரமாகச் சம்பாதிக்கும் முறை அப்பொழுதே ஏற்பட்டிருந்தது போலும். (உள்ளூர் சண்டைக்கு அயலூராரை மத்தியஸ்தம் செய்ய அழைத்ததின் பலன் என்ன என்பது வெளியாகிறது.) ராபர்ட் ப்ரூஸ், ஜான் பாலியால் என்ற அவ்விருவரில் எட்வர்டுக்கு அடங்கி ராஜ விசுவாசப் பிரமாணம் செய்து அரசு பெற ராபர்ட் ப்ரூஸ் தைரியத்துடன் மறுத்ததாலும், பாலியல் என்பவர் சம்மதித்து ராஜவிசுவாசப் பிரமாணம் செய்ததாலும் எட்வர்டு பாலியலையே ஸ்காட்லந்து அரசராக நியமித்து, ஸ்காட்லந்து அரசர் வழக்கமாக இருந்து முடிசூட்டிக்கொள்ளும் அதிருஷ்டக் கல்லையும் இங்கிலந்துக்குக் கொண்டுவந்து விட்டார்! அந்தக் கல் இன்றும் வெஸ்ட்மின்ஸ்டர் அப்பீ (Westminster Abbey) யில் இருந்து அதன்மேல் இங்கிலந்து அரசரின் சிம்மாதனம் பொறுத்தப்பட்டிருக்கிறதென்று சொல்லப்படுகிறது!!

சமயத்தில் பணிந்த பாலியல், பிறகு எட்வர்டை எதிர்க்கத் தொடங்கினுர். ஏனெனில் தேச ஸ்வதந்தரத்தைக் காட்டிக் கொடுத்ததால் ஸ்காட் மக்கள் பாலியாலுக்கு அடங்கி யிருக்க மறுத்தனர். அவர்கள் இஷ்டப்படி பாலியால் எதிர்த்தபோது எட்வர்டு அவர் நாட்டின்மீது படையெடுத்து அவரை யுத்தத்தில் தோற்கடித்து தம்மை ஸ்காட்லந்துக்கு மேலதிகாரியாக ஒப்புக்கொள்ளச் செய்து திரும்பினுர். மறுபடியும் ஜனங்களின் கலகங்களுக்கும் கோபத்திற்கும் இலக்காக இருந்த பாலியால் இறக்கவே, எட்வர்ட் தன் பேரால் ஆட்சி செய்ய சில ஆங்கில பிரபுக்களை யனுப்பிவைத்தார். அவர்களுடைய ஆட்சியை வெறுத்த ஸ்காட் மக்கள் வில்லியம் வாலஸ் என்பவரை தங்கள் தலைவராகக் கொண்ட ஒரு சேனையைத் திரட்டி ஆங்கிலேயரை ஸ்டர்லிங் (Sterling) என்ற விடத்தில் தோற்கடித்து விரட்டினர். உடனே எட்வர்டு பலமானதொரு சேனையுடன் ஸ்காட்லந்து சேனையை பால்கர்க் (Falkirk) என்றவிடத்தில் முறியடித்தார். வாலெஸ் ஓடி, பிடிபட்டு

ராஜத்துரோகி என ஆங்கிலேயரால் மரண தண்டனை விதிக்கப்பட்டார். இம்மாதிரி ஆங்கிலேயர் மறுமுறையும் வெற்றியடைந்தனர்.

இம்மாதிரி சில வருஷங்கள் சென்றதும், சளைக்காத ஸ்காட் மக்கள் தைரியத்துடன் பழைய புரூஸின் பேரனை இளஞ்சிங்கம் ராபர்ட் புரூஸைத் தம்மரசராகக்கொண்டு போர் தொடுத்தனர். "அடுத்து முயன்றாலும் ஆகுநாளன்றி எடுத்த கருமங்கள் ஆகா" என்ற விதிப்படி கடும்போர் தொடுத்தும் ஜெயிப்பும் தோற்பும் மாறி மாறி வந்தது. "ஆயினும் முயற்சி திருவினையாக்கும்" என்பதற்கிணங்க கடைசியில் இங்கிலந்து அரசர் இறந்த பிறகு எளிதில் தம் கோரிக்கையை ஈடேற்றினார். எனெனில் வேல்ஸ் இளவரசர் எட்வர்டு சோம்பேறி. மந்திரிகளிடம் விஷயங்களை ஒப்படைத்து தூங்கி விழுந்தார். அதனால் 1314ல் பானக்பர்ண் (Bannockburn) என்ற விடத்துச் சண்டையில் ஸ்காட் மக்கள் பரிபூரண வெற்றி பெற்றுத் தம் சுவதந்தரத்தை நிலை நிறுத்தினர். (இந்த ராபர்ட் ப்ரூஸ் சளைத்து நம்பிக்கையெல்லாம் இழந்து ஒரு குகையில் திகைத் திருந்தபோது தான் ஒரு சிலந்தியின் மூலம் ஊக்கம் பெற்றார் என்று ஒரு அருமையான ஆங்கிலக் கவியுண்டு)

இனி எட்வர்டு அரசரின் பேரன் நடத்திய நூற்றாண்டுப் போர் அடுத்து எழுதப்படும்.

## மகாத்மா மணி வாசகம்

சரீரத்துக்கு அசுத்தம் ஏற்படக்கூடிய வேலைகள் செய்யும் பொழுதும் அசுத்தமான வியாதி இருக்கும்போதும் எல்லாரும் தீண்டாதவர்கள்தான். சரீரம் சுத்தமாய்விட்டால் இந்தத் தீண்டாமை ஒழிந்துபோய்விடும். ஆனால் பிறப்பின் காரணமாக ஒருவனைத் தீண்டத் தகாதவனென்றும் அவன் பாவத்துடன் பிறந்தவனென்றும் கருதுவது தற்கால இந்து தர்மத்தில்தான் இருக்கிறது. அஹிம்சையே பெரும் தர்மமென்று கருதும் ஹிந்து மதத்தினர் தமது துவேஷ புத்தியை மறு உலகம் வரையில் செலுத்துவது மனதை இடியச் செய்யும் காட்சியாகவே இருக்கிறது.

ஹரிஜன ஊழியர்கள் மிகவும் எச்சரிக்கையுடன் நடந்து கொள்ள வேண்டும். சநாதனிகள் முரட்டுத்தனத்தில் இறங்குவதாய்ச் செய்திகள் வருகின்றன. பொதுக் கூட்டங்களைக் கலைப்பதற்கும் பலாத்காரத்தைத் தூண்டுவதற்கும் அவர்கள் தயங்குவதில்லை. இதில் புதுமை ஒன்றுமில்லை. பாவத்துக்கும் சில உடைமைகள் இருக்கின்றன. அந்த உடைமைகளுக்கு இப்பொழுது ஆபத்து ஏற்பட்டிருப்பதால் அந்த உடைமைகளைக் காப்பாற்ற பெரும் முயற்சி நடக்கத்தான் செய்யும். ஆகையால் இம்மாதிரி தகராறுகளும் குழப்பங்களும் ஏற்பட இடமிருந்தால் ஹரிஜன ஊழியர்கள் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். ("ஹரிஜனம்")




(660-ம் பக்கத் தொடர்ச்சி)

[ஆங்கிலப் பேரறிஞராகிய Ruskin ஆசிரியர் எழுதிய "Unto This Last" என்னும் நூலின் மொழி பெயர்ப்பு.]

## 3. செல்வநாடி.

இனி, இச்சமத்துவ ஹீனங்கள் எவ்வாறு ஏற்படுகின்றன என்பதைக் கூடியவரை சிக்கல் இல்லாத நிலைமையில் செல்வம் தொகுக்கப்படும் வழிகளுக்கு இரண்டொரு உதாரணங் காட்டி அவ்வுதாரண மூகத்தால் ஆராய்வாம்.

கடலில் உடைந்துபோன கப்பல் ஒன்றிலிருந்து இருவர் தப்பி நீந்திச் சென்று குடிமனையே இல்லாத ஒரு தீவிற் சேர்ந்ததாகவும், அவர்கள் ஆண்டுத் தம் உழைப்பைக் கொண்டே உயிர் வாழவேண்டி இருப்பதாகவும் வைத்துக் கொள்வோம்.

இருவரும் தேகசுகம் உடையவராய் விடா முயற்சியுடன் பிணக்கின்றி உழைத்தால் இருவரும் தனித்தனி வசதியான வீடு கட்டிக்கொள்ளலாம். நாளடைவில், பண்படுத்தப்பட்ட நிலமும், வருங்கால உபயோகத்துக்கெனச் சேமிக்கப்பட்ட பல்வகைப் பண்டங்களும் இவர்கள் சொத்து ஆகும். இவை எல்லாம் உண்மைச் செல்வம் அல்லது உடைமைகள் ஆம். இருவரும் ஒப்ப உழைத்தால் இருவருக்கும் சரிசமமான பங்குக்கு உரிமை உண்டு. இவர்கள் பொருளாதாரமெல்லாம் இவ்வுடைமைகளைப் பத்திரமாகப் பேணுவதும் நியாயமாகப் பங்கிடுவதுமே யாம்.

சிறிது காலத்தின் பின். இவ்விருவரில் எவராவது, பொது உழைப்புத் திருப்திகரமாகப் பலன் தரவில்லை என்று கருதி, பண்படுத்திய நிலத்தைப் பகிர்ந்து, இருவரும் தம் தம் நிலத்தில் தனித்தனி பயிர் செய்வதென்று முடிவு செய்வதாகக் கொள்வோம். இவ்வாறு பிரித்துக் கொண்டபின் அதி முக்கியமான (பயிர் நடுகை அல்லது அறுவடை போன்ற) ஒரு வேலை செய்யும் பருவத்தில் ஒருவன் நோய்வாய்ப்பட் டிருப்பதாகக் கொள்வோம். இயல்பாக இவன் மற்றவனைத் தனக்காகத் தன் வேலையைச் செய்யும்படி கேட்பான்.

மற்றவன், "இப்பொழுது நான் இந்த வேலையை உனக்காகச் செய்கிறேன். ஆனால் நீ இன்னொரு சமயம் இவ்வளவு வேலை எனக்குத் தரவேண்டும். நீ வேலை செய்யச் சக்தி உள்ளவனாய் வந்தபின், நான் இப்போது உன் வயலில் வேலை செய்யும் அவ்வளவு நேரம் நீயும் என் வயலில் வேலை செய்து தருவதாக வாக்குறுதி செய்தல் வேண்டும்" என்று கேட்டால் அது முற்றிலும் நியாயமே.

இந்நோய் பல காரணங்களால் சில வருடங்களுக்கு நீடித்திருப்பதாகவும், வருடா வருடம் மற்றவனுடைய உதவி தேவையென்றும் ஒவ்வொரு முறையும் தனக்குச் செய்த அளவு வேலை தான் மற்றவன் கேட்டபொழுது அவனுக்குச் செய்து தருவதாக நோயாளி வாக்குறுதி செய்ததாகவும் கொள்வோம். இவன் நோய் தீர்ந்து வேலை செய்யக்கூடியவனுயபோது இவர்கள் பொருளாதார நிலை எப்படி இருக்கும்? ஒரு "தேசம்" ஆகக் கருதப்படும் இடத்து, நோய் இல்லாமல் இருந்தால் இவர்கள் ஈட்டியிருக்கக்கூடிய செல்வத்தினும் இப்போது இவர்கள் பால் உள்ள செல்வம் குறைந்தே இருக்கும்; இடைக் காலத்தில் நோயுற்றவன் உழைப்பினுற் பெற்றிருக்கக்கூடிய செல்வம் எவ்வளவோ அவ்வளவு குறைந்திருக்கும். அவனது நண்பன் தேவையால் உந்தப்பட்டு வழக்கத்துக்கு அதிகமாகவே உழைத்தானுயினும், இறுதியில் அவன் இருவர் செய்யக்கூடிய வேலையைத் தனியே செய்வது அசாத்தியம். இருவர் வயல்களும் சொத்துக்களும் இதனுற் சிறிது நட்டமுறவே நேரும்.

இவ்வாறு தேசத்தின் செல்வ நிலை குறைந்ததோடு, இருவர்க்குமிடையில் உள்ள தொடர்பிலும் பெரிய மாறுதல் ஏற்பட்டிருக்கும். நோயுற்றிருந்தவன் சில வருடங்களுக்குத் தன் உழைப்பை மற்றவனுக்கு உரிமையாக்கியிருப்பது மட்டுமல்ல, இவன் சேமித்து வைத்திருந்த பண்டங்களும் செலவு செய்தாகிவிடும். இவன் உணவுக்குச் சில காலத்துக்கு மற்றவனையே நம்பியிருக்க வேண்டும். இவ்வுதவியைப் பெறுவதற்குத் தன் வருங்கால உழைப்பை இன்னும் அதிகமாக அடைமானம் ஆக்குகிறுன்.

இவ்வாக்குறுதி பிறழாமல் நிறைவேற்றப்படுமாயின் (—நாகரிகம் வாய்ந்த நாடுகளில் இவை சட்டங்களால் வற்புறுத்தப்படும்—) இதுவரை இருவருக்குமாக வேலை செய்தவன் இப்போது விரும்பினுல் வேலை செய்யாமல் சோம்பலாகக் காலங் கழித்துக் கொண்டு, மற்றவன் செய்து தீர்க்கவேண்டிய கடன் வேலையைச் செய்விப்பது மட்டுமன்றி, இப்போது அவனுக்கு வேண்டிய உணவு உடை முதலியன உதவுவதற்கு இன்னும் அவனுடைய உழைப்பை அளவிற்கு அதிகமாகவே கட்டுப்படுத்திக் கொள்ளவும் முடியும்.

இதில் முதலிலிருந்து கடைசிவரை சட்ட விரோதமானது எதுவும் இல்லை. ஆனுல் இத் "தேச"த்தில் புதிதாக வந்திறங்கும் அந்நியன், இவ்விருவரில் ஒருவன் வியாபார செல்வம் உடையவனுகவும், மற்றவன் அவ்வகையில் வறியவனுகவும் இருக்கக் காண்பான். ஒருவன் சோம்பலாகக் காலங் கழிப்பதையும், மற்றவன் இருவருக்கும் உழைத்துத் தன் உணவு உடை முதலியவற்றையும் சுருக்கி, தூர காலத்திலாவது தன் கடனைத் தீர்த்து முடித்து இழந்த சுதந்தரத்தை மீண்டும் பெறலாம் என்னும் ஆவலுடன் கடுமையாக உழைப்பதையுங் கண்டு பெரிதும் ஆச்சரியப்படுவான்.

இது, வியாபார செல்வத்திற்கும் வறுமைக்கும் காரணமாக, பல மனிதர்களிடையே சமத்துவ ஹீனம் ஏற்படும் பல வழிகளில் ஒன்றுக்கே உதாரணமாகும். இவ்வுதாரணத்திலேயே இருவரில் ஒருவன் ஆதியிலேயே சோம்பலினுல் வேலை செய்யாமல் தற்பொழுதையே சுகத்திற்காகத் தன் வருங்கால உழைப்பை அடைமானமாக்கி யிருக்கலாம். அல்லது, தன் வயலைச் சரியாக விளைவிக்காமல், மற்றவனிடம் உணவும் உதவியும் பெற, வருங்கால உழைப்பை அடைவு படுத்தியிருக்கலாம். இச் சமத்துவ ஹீனம் ஏற்படும் வழி எதுவாயினும், (தேச) பொருளாதார செல்வத்தின் குறைவினுலேயே வியாபார

செல்வம் (=பிறர் உழைப்புக்கு உரிமை) ஏற்படுகின்றது என்பதை மனதிற் பதிய வைத்துக் கொள்ள வேண்டும்.

சாதாரணமாக உலகத்தில் வழங்கும் வியாபார முறைகளுடன் இன்னும் அதிக ஒப்புமையுள்ள இன்னொரு உதாரணத்தை எடுத்துக் கொள்வோம். குறித்த தனிக் குடியரசில் இருவர்க்குப் பதில் மூவர் இருப்பதாகக் கொள்வோம். இவர்கள் மூவரும் அவ்வூரில் ஒன்றுக்கொன்று தூரமான மூன்று இடங்களில் தனித்தனி பயிர் செய்யப் பிரிந்து செல்கின்றார்கள். இதில் ஒரு பாகத்தில் விளைந்த பொருள் மற்றப் பாகத்தில் வசிப்பவருக்குப் பரஸ்பரம் தேவை என்றும், மூவரில் ஒருவன் மற்றவர்களுக்கும் தனக்கும் வசதிக்காக இந்த அவசியமான பொருட்களை இடம் பெயர்க்கும் வேலையைத் தான் மேற்கொண்டு, அதற்குக் கூலியாகத் தான் கொண்டு சேர்க்கும் பொருளில் நியாயமான பாகம் பெறுகிறான் என்றும் கொள்வோம்.

இந்தத் தூதன் இரு பகுதிக்கும் அவசியம் வேண்டிய பொருட்களைக் கொண்டு சேர்த்தால் கிருஷிகம் சிறப்பாக நடைபெறும்; கூடிய அளவு செல்வம் அச்சிறு சமூகத்துக்குக் கிடைக்கும்.

ஆனால், இத்தரகன், தன் மூலமாகவன்றிக் கொடுக்க வாங்க இவர்களுக்கு வேறு வழி இல்லை என்று கண்டு, தன்னை நம்பி ஒருவன் ஒப்புவித்த பொருளை உரிய காலத்தில் மற்றவனிடம் சேர்க்காமல் வைத்திருந்து, இவன் இப்பொருளை அத்தியாவசியமாகத் தேவைப்படும் காலம் பார்த்திருந்து, கஷ்டத்துக்குட்பட்ட விவசாயி தன் பொருளெல்லாம் கொடுத்தும் இதனைப் பெற வேண்டிய நிலைமையிலிருத்தல் கண்டு, அப்பொருள் எல்லாம் பெற்றுக் கொண்டு கொடுப்பானாயின், இவ்வாறு இருதரப்பிலும் காலம் பார்த்து இரு விவசாயிகளின் சேமப் பொருளில் பெரும்பாகத்தைக் தனதாக்கிக் கொள்ளலாம் என்பது சுலபமாக விளங்கும். இவ்வாறு தனதாக்கிய பொருளைச் சேமித்து வைத்திருந்து, விளைவு குறைந்த (அல்லது இல்லாத) வருடத்தில் இப்பொருள் கொண்டு இரு தோட்டங்களையும் தான் வாங்கி மற்றிருவரையும் தனக்குக் கூலிவேலை செய்பவராக்கிக் கொள்ளலாம். இதுவும் வியாபார செல்வத்தைப் பெருக்கும் வழியே.

ஆனால், இதில் முன் உதாரணத்திலும் அதிகமாகவே பொருளாதார செல்வம் குறைவடைந்திருக்கும். தரகன் நியாயமான கூலி போதுமென்று காலந் தவறாமல் பொருட்களைக் கொண்டு சேர்த்தால், கிருஷியும் சிறப்பாகச் செய்யப்பட்டு விளைவும் அதிகமாக இருக்கும். ஆனால் காலந்தவறி அக்கிரம விலைக்கு இவன் பொருட்களை விற்கத் தொடங்கியதால் கிருஷிகம் எவ்வளவு தடைப்படுத்தக் கூடுமோ அவ்வளவும் தடையுறுத்தப்பட்டு விளைவும் மிகச் சுருங்கியே இருக்கும். வேண்டியபோது அவசியமான பொருட்கள் கிடையாமையாலும், தங்கள் உயிர் வாழ்வுக்கே இரவு பகல் உழைப்பதன்றி நிரந்தரமான லாபம் இல்லாமற் போவது கண்டு விவசாயிகட்கு உண்டாகும் ஊக்கக் குறைவாலும், அவர்கள் விளைவிக்கும் பொருட்களின் அளவு குறைந்தேவிடும். ஈற்றில், வியாபாரி தன் உடைமையாகத் தொகுத்துக் கொண்ட சொத்து, அவன் நியாயமான கூலி மட்டுமே பெற்றுத் தன் வேலையைக் கிரமமாகச் செய்திருந்தால் அவன் கையிலும் விவசாயிகள் கையிலுமாகச் சேர்ந்திருக்கக்கூடிய பொருளின் அளவில் எத்துணையோ பங்கு குறைந்தே இருக்கும்.

ஆகவே, தேச பொருளாதார செல்வத்தாலாம் நன்மை மட்டுமல்ல. அச் செல்வத்தின் அளவும் நீதியைப் பொறுத்ததே. தொகுக்கப்பட்ட செல்வத் திரளைக் கண்டு, அது இருப்பது கொண்டே, அது, தான் இருக்கும் தேசத் திற்கு நன்மையையோ தீமையையோ குறிக்கின்றதென்பதைக் கூறமுடியாது. வியாபார செல்வம் இருப்பது நேர்மையான முயற்சி, அபிவிருத்தி உறும் சக்தி, ஆக்க சாதுரியம் இவற்றைக் குறிக்கலாம்; அல்லது சோம்பல் மீதூர்ந்த சம்பிரமம், இரக்கமில்லாக் கொடுமை, அழிவு சூழும் வஞ்சம் இவற்றைக் குறிக் கலாம். சில திரவியங்கள், நன்றாக முற்றிலும் விளைந்த நெற்கதிர் அகால மழையால் நனைந்து அழிவதுபோல, அழிவுக்கே காரணமாக, ஏழைகள் கண் ணீரால் நனைந்து, பாரமாக இருக்கும். சில பொன் தனக்கு இயல்பாக உள்ள ஒளியினும் அதிகமாகவே வெயிலில் இலங்கும்.

இவையெல்லாம் பொருள்தேடப் புகும் ஒருவன் "வெறுந் தர்ம விதி கள்" என்று இகழ்ந்து, விரும்பினால் அலக்ஷியஞ் செய்யக்கூடியவை அல்ல. இவை கணிக்க முடியாதவிதமாகப் பணத்தின் மதிப்பைத் தப்பாமல் கூட்டி யோ குறைத்தோ பாதிப்பனவாய், செல்வத்தினின்று பிரிக்க முடியாத அதன் பண்புகள்.

ஒரு தொகைப் பணம் ஆக்க வேலையால் தொகுக்கப்பட்டது;—இன் னொரு தொகை அழிம்பால் தொகுக்கப்பட்டது; தொகுக்கப்பட்ட பொருளி னும் பன்மடங்கு பொருளை அழித்துத் தொகுக்கப்பட்டது; எத்தனையோ வலிமிக்க கைகளை வலிமடக்கி, எத்தனையோ பலமிக்க மனிதரது தைரியத் தை அழித்து, எத்தனையோ ஆக்க வேலைகளைத் தடுத்துச் சேர்க்கப்பட்டது. மரக்கலத்தை வஞ்சனையாற் பாறைகளினிடை வரச் செய்து, உடைந்த கலத்தினின்றும் பொறுக்கி எடுத்த ஒரு கைப்பிடி பொன்—களத்தில் இறந்த வீரர் மார்பிலிருந்து பாசறை வேலைக்காரன் கழற்றி எடுத்த கந்தற் கட்டு.

"மலிந்த இடத்தில் வாங்கி ஒறுத்த இடத்தில் விற்கவேண்டும்" என்று சாதாரணமாகச் சொல்லிக்கொள்ளுகிறார்கள். மலிந்த இடத்தில் வாங்கு வதா? ஆம்; ஆனால் அம்மலிவு வந்த வகைதான் என்ன? உங்கள் வீதி தீப் பற்றி எரிந்தபின் அங்கு கரி மலிவாக இருக்கலாம்; பூகம்பத்தால் அழிந்த தெருவில் கரி மலிவாகலாம். ஆயினும் இதுகொண்டு வீடுகள் எரிவதும் பூகம்பத்தால் அழிவதும் தேசத்துக்கு நன்மை என்று கருதுபவருமுண்டோ?

ஒறுத்த இடத்தில் விற்பதா? ஆம், மெய்யாகவே; ஆனால் இந்த ஒறுப் புத்தான் எதனால் ஏற்பட்டது? இன்று உன் ரொட்டியை ஒரு விலைக்கு விற் றாய். யாருக்கு? நாளை உணவே வேண்டாதான் இன்று மரணமடையுந் தறு வாயில் இருப்பவனுக்கு அவன் கையிலுள்ள கடைசிக் காசைப் பெற்றுக் கொண்டு கொடுத்தாயா? அல்லது நாளை நீ குடியிருக்கும் வீட்டைத் தனதாக் கிக் கொண்டு உன்னை அடிமைப்படுத்த இருக்கும் தனிகனுக்கு விற்றாயா? அல்லது நீ உன் சேமநிதி எல்லாம் இட்டு வைத்திருக்கும் பாங்கியைக் கொள் ளையிடச் செல்லும் மறவனுக்கு விற்றாயா?

இவை எல்லாம் நீ அறிவது அசாத்தியம். ஒரு விஷயமே நீ அறிய முடியும். அதுதான் நீ உன் பொருளை விற்பதில் நேர்மையாகவும் நீதியாக வும் நடந்து கொண்டாயா என்பதே. இவ்வளவும் நீ பார்த்துக் கொண்டாற் போதுமானது. இவ்வாறே இவ்விஷயங்களெல்லாம் நீதி என்னும் பெரிய தத்துவத்திற் சென்றடைகின்றன. இந்நீதியைக் குறித்து அடுத்த பத்திரத்

தில் விவரிப்போம். இப்பொழுது மூன்று விஷயங்களை மட்டும் மனதிற் பதித்துக் கொள்ள வேண்டும்.

பிறர் உழைப்பை ஆளும் உரிமை இன்றி உடைமைகள் ஒருவனுக்குப் பயன்படா என்பதும் பணம் இவ்வுரிமையைத் தருவதனாலேயே மதிக்கப்படு கிறதென்பதும் முன் காட்டப்பட்டன. ஆனால், பிறர் உழைப்பு எப்பொழுதும் பணத்தினால் மட்டும் கட்டுப்படுவதல்ல. பணத்தின் சக்தி எப்பொழுதும் விகலமும் சந்தேகாஸ்பதமானதுமாம். பணத்தாற் பெறமுடியாத எத்தனையோ பொருட்கள் உண்டு; பணத்தாற் காக்க முடியாத பொருட்களும் பல. பொன்னை விலை கொடுத்துப் பெறமுடியாத எத்தனையோ இன்பங்கள் மனிதர்க்கு அளிக்கலாம்; பொன்னால் விலை மதிக்கவோ கைம்மாறளிக்கவோ முடியாத விசுவாசமும் மனிதரிடம் காணலாம்.

இன்னும் பணத்தின் பிரயோசனம் பிறர் நமக்கு அமைந்து நடப்பதேயாதலால், இந்த அமைவுக்குக் குறைவு வரின் பணம் பயனற்றதாமன்றோ?

கூலி சரியாகக் கிடைக்கவில்லை என்று நாள்தோறும் கூலிக்காரர் பிணங்கினால், முதலாளியின் செல்வாக்கு எத்தகையது?

கூலிக்காரர் பசியால் மெலிந்து முகஞ்சுருங்கிக் கந்தை யணிந்து கலங்குவது கண்டார் அவ்வீட்டுத் 'தலைவன் பெயரளவிலும் காகிதத்திலுமே செல்வன் எனக் கருதுவது இயல்பே யன்றோ?

இறுதியாக, மனிதரை ஆளும் மாண்பே செல்வமாதலால், எத்தனை பேர்க்கு நிழல் அளிப்பதோ அத்துணை பெரியதன்றோ செல்வம்? ஆழ யோசிக்குமிடத்து இம்மனிதரே செல்வம்—பரியை அடக்கி நடத்த உபயோகிக்கும் கடிவாளம்போல, இம்மனிதரை நம் வழிப்படுத்தி நடத்த நாம் உபயோகிக்கும் பணம், எவ்வளவுதான் இலங்குவதாயினும், இம் மக்கள் இக் கடிவாளமும் கசையடியும் இல்லாமலே வழிநடத்தப்படுவாராயின், முற்றும் பயனற்றதாதலும், இம்மக்களே பயன்தரவும் பெறவும் வல்லராதலும் காணலாம்.

செல்வநாடி செந்நிறம் வாய்ந்ததன்றிப் பொன்னிறம் வாய்ந்ததல்ல; மக்கள் உடம்பில் அமைந்ததன்றி மண்ணிலும் மலையிலும் அமைந்ததல்ல. மக்கள் உடம்பே மணியினும் பொன்னினும் மாண் பயன் பெரிதுடைத்து. மனிதர்க்கு இன்பம் அளிப்பதே பொருளால் ஆம் பயன். மக்கள் யாக்கையைச் சுருக்கி மகிழ்ச்சியைக் கெடுத்துப் பொருள்தேடி அடையும் பயன் யாதுமில்லை.

இந்த உண்மைகளைத் தேச மக்கள் உணர்ந்து கடைப் பிடித்தல் வேண்டும். மாதர்களும் பொன்னினும் மணியினும் புனைந்த அணிகலங்களை மதியாது, மங்கலமாகிய தம் மனைவாழ்க்கைக்கு நன்கல மாவார் நன் மக்களே என்னும் பொருளுரையைத் தேர்ந்து உறுதி கொள்வாராக.

**சந்தாதாரர்களுக்கு:**—சந்தா நெம்பர் தெரியாதவர்கள் மாத மாதம் வரும் சஞ்சிகையின்மேலுள்ள விலாசத்தில் குறிக்கப்பட்டிருக்கும் நம்பரைப் பார்த்துக் குறித்து வைத்துக்கொள்ளக் கோருகிறோம்.

# கந்தப்பன் காதல்!

(திரிச்சி-கி. அ. பே. விசுவநாதம்.)

மாலைப் பொழுதினிலே மதுரை நகர்ச் சாலையிலே
சோலை வனத்தினிலே தோன்றும் மயில் போலே (1)

தண்ணீர்க் குடமெடுத்துத் தனித்தொருபெண் மனங்கலங்கிக்
கண்ணீர்தனை யுகுத்துக் கவலையுடன் சென்றனளே (2)

நவமணியின் பணியிலுயர் நலமிகுங்கற் பணியணியைப்
பவள இதழ் குவளைவிழிப் பசுங்கிளியைப் பார்த்துவந்து (3)

நாட்டமுடன் தொடர்ந்த நல்லான் ஒரு இளைஞன்
வாட்டமுடன் தனியே மங்கை நீ செல்வதெங்கே? (4)

என்றான் வினவவுமே எற்ற தொன்றுஞ் சொல்லாமல்
சென்றாள் பின்னுந் தொடர்ந்தான் செயலை யறிய வென்றே (5)

நீ றென்னைக் கேட்பதென்றால் நீரா ரென்றே வினவி
ஊரென்ன? பேரென்ன? உள்ளதை உரையு மென்றாள். (6)

சுந்தரியே என்னுடைய சொந்தவூர் தென்மதுரை
கந்தப்ப னென்றெனக்குக் காசினியி லேபெயராம். (7)

கந்தப்ப னென்றுரைத்தால் கையினிலே வில்லம்பு
சந்தேக மில்லாமல் தானிருக்க வேண்டுமென்றாள் (8)

வீறுகொண்டு சொன்ன சொல்லை மெச்சினது போலேவாய்
ஊறுதடி மாதரசே! உன்னிருப் புரைத்திடுவாய் (9)

என்னூருந் தென்மதுரை என்னிருப்புப் புதுநகரம்
என் பெயரோ முத்துமணி எகுவது தண்ணீர்க்கே (10)

நீ றெடுத்துத் தனக்குடங்கள் நேரெடுத்துத் தலைமீது
ஆரெடுத்து வைப்பார்கள்? அத்துணைக்கு நானுவேன். (11)

தலைமீது நிறை குடத்தைத் தாங்கி வைக்க வருங்கருத்தை
மலையாது ரைத்திடுவீர் வகையறிந்து சொல்வேன் காண் (12)

சொல்வது தான் ஒன்றுமில்லை துணையென்று சொல்வதன்றி
நல்வார்த்தை பேசிவழி நாடி நடந்திடுவோம். (13)

நடக்கும்வழி நானறிவேன் நயக்கும் மொழி நானறிவேன்
மடந்தையரைத் தொடர்ந்துவரும் வழித்துணையும் பழிப்பாமே. (14)

வழித்துணை யென்றெண்ணமல் மான்போல் மிரளுகின்றாய்
பழிப்புனக்கு வாராத படிநடந்து கொள்வேனே (15)

எனிந்தச் சொற்களெல்லாம் இனியொன்றும் பேசாதீர்
நானிந்தச் சூதையெல்லாம் நன்கறிவேன் நில்லுமென்றாள் (16)

நில்லென்றால் நிற்பேனோ? நெடுந்தூரம் வந்த என்னைச்
செல்லென்றால் உன்னைவிட்டுச் செல்வேனோ? செங்கரும்பே! (17)
அருந்துணைபோல் வந்தவரே! அருகிருக்கும் சுனை நீரை
வருந்தாது கொண்டுசெல்வேன் வழித்துணையை மதித்திடுவேன் (18)
என்றாளந் தப்படியே எடுத்தாள் தண் ணீரையுமே
சென்றாள் திரும்பவுமே சென்றான்கந்த ப்பனுமே. (19)
பின்னடந்து வந்தவனைப் பெண்ணே! என அழைத்துத்
தன்குடத்து நீரெனக்குத் தந்துதவ வேண்டுமென்றான். (20)
சுனைவரையிற் துணைபோலுந் தொடர்ந்து வந்த சுந்தரரே!
எனைத்தண்ணீர் கேட்பதென்ன? எளனமோ பண்ணுகின்றீர்? (21)
போகவர நேரமில்லை பொற்கொடியே! பொழுதாச்சு
தாகம் மிக எனக்குத் தண்ணீர் கொடுத்திடுவாய் (22)
தாங்கிக் குடமிறக்கித் தண்ணீருந் தான்கொடுத்தாள்
வாங்கிக் குடிப்பவன்போல் வடிவழகன் கூறுகின்றான். (23)
தாகவிடாய் தவிர்க்கத் தண்ணீரை நீ கொடுத்தாய்
மோகவிடா யதுதான் முற்றவைத்து விட்டதடி! (24)
என்ற உரை கேட்டு இருசெவியில் நாராசம்
சென்றதெனத் துடித்துத் திகைத்து மனம்பதறி (25)
ஏது சொல்வி ஏது செய்தும் எளனமே செய்துவந்தால்,
சூதுகொண்ட வாதாகும் தூற்றலுக்கும் ஆளாவேன். (26)
தூற்றலுக்கும் வைக்கவில்லை சுனை நீருங் கேட்கவில்லை
போற்றலுக்கு வைத்திருக்கும் பொற்குடத்து நீர் கேட்டேன் (27)
என்ன உமது எண்ணம்? என்ன உமது செயல்?
என்ன கருதுகின்றீர்? என்ன என்னை வேண்டுகின்றீர்? (28)
போக விடாய் தீரப் புன்சிரிப்பும், பின் எனது
மோக விடாய் தீர முத்தி ஒன்றும் வேண்டுகின்றேன். (29)
முத்தியோ நான் கொடுப்பேன்? முத்துமணியே யானால்,
புத்தியே நான் கொடுத்துப் போவேன் புது நகரம். (30)
போதம், நிதி, கல்வி பொன்ற வருங் காலம் அயல்
மாதர் மேல் வைக்குமந்த மனமதையுங் கொண்டீரோ? (31)
வாழ்வைக் கெடுக்குமென்றும் மதியை மதியாத
தாழ்வைக் கொடுக்குமென்றும் சாற்றினர் தக்கோரே! (32)
என்றென்றும் ஒவ்வாத இவ்வழியிற் செல்லாதீர்
நன்றொன்று மில்லை யென்றே நவின்றார்கள் நல்லோரே! (33)
கந்தப்ப னென்றதுவுங் கன்னி வள்ளி என நினைத்தோ?
தந்தம் முளைக்கு முன்னென் தாலி யறுத்துவிட்டார்! (34)
உருண்டு தவழுகின்ற ஓராண்டுப் பருவமதில்
சுருண்டு மடிந்தானும் சுந்தரனும் என் கணவன்! (35)
ஆராரோ மணமியற்றி அமங்கலையாய் எனை ஆக்கி
"ஆராரோ" என்று சொல்லி ஆட்டினராம் தொட்டிலிலே! (36)

வளமை தளருமென்ற மதியிழந்த முதியோர்கள்
இளமை மணமியற்றி என் வாழ்வைக் கெடுத்தனரே! (37)
வெள்ளி முழுக்குமில்லை வேடிக்கைப் பொட்டுமில்லை
தள்ளினர் எங்களுக்குத் தாரணியில் இல்லை யென்றே! (38)
மங்கை மறு மணத்தை வழக்காகக் கொள்ளவில்லை.
எங்கள் குறைகளையே எவரும் நினைப்பதில்லை! (39)
சாதி வழக்கமில்லை சாஸ்திரமும் பேசவில்லை
நீதியோ ஒன்றுமில்லை நேர்மையோ என்றுமில்லை! (40)
முன்னுளில் ராஜாராம் மோகனராய் சட்டமதால்
இந்நாளில் உடன்கட்டை யேறுவதற் கியலவில்லை! (41)
ஆரே துணையாவார்? அமங்கலையாய்ப் போனவர்க்கு
சீரேது மில்லை;யன்றித் தெய்வமுமே இல்லைகண்டீர்! (42)
ஒருவர்க் கொருநீதி உரைக்கும் மனுநீதி
தருவதநீதி யென்றே தள்ளினர் ஆராய்ந்தோர்! (43)
என்றாலும்; என்போன்றார் ஏற்றவழியில் நின்று
சென்றாலே நல்லதன்றிச் சீரழிதல் நல்லதன்றே (44)
என்றாள் கண்ணீர் சொரிந்து ஏங்கி மனந்தளர்ந்து
நின்றாள் மதியிழந்து நின்றாள் நிலைகுலைந்து (45)
பதியிழந்த, பணியிழந்த, பருவமதின் பயனிழந்த,
நிதியிழந்த, கதியிழந்த நினைவுவந்து தனைமறந்தாள். (46)
மின்னலைய நுண்ணிடையாள் மேனி மிக வருந்தப்
பொன்னனையான் தன்னடியில் பூங்கொடியே போல்விழுந்தாள். (47)
வாரி எடுத் தணைத் தான் மடிமீ திருத்தி வைத்தான்
காரிருளில் மங்கைமுகங் கண்டான் மதி யெனவே! (48)
மோகமெங்கே? தாகமெங்கே முன் மொழிந்த போக மெங்கே?
சோக மங்குத் தோன்றியதும் சொல்லாமற் போயினவே! (49)
களைப்போ உனக் கின்று கவலையோ நான் கொடுத்தேன்
இளைப்போ உனக்கு நான் ஏமாப்போ செய்துவைத்தேன் (50)
இல்வாழ்வின் இன்ப மழை எல்லோரும் சமமாக்கி
நல் வாழ்வு கொள்வதுவே நல்ல தென்று நன்குணர்ந்தோர் (51)
கண்டார்கள் நல்லியக்கங் கண்டார்கள் சீர்திருத்தங்
கொண்டார்கள் நன்னிலையைக் கொண்டார்கள் இந்நாளில் (52)
என்றைக்கும் அஞ்சாதே! என்னுடலே நின்னுடலாம்
இன்றைக்கே நான் கொடுத்தேன் என்னுடைய வாக்குறுதி! (53)
விடலை நான் கைவிடலை மீண்டுமிந்த உடலையந்தச்
சுடலை கொண்டு போமளவும் துணையாகுந் துணையாவேன்! (54)
அன்றுதிரு வள்ளுவனர் அருள்மொழியே பொய்த்தாலும்
இன்றுநான் சொன்ன மொழி என்றுமே பொய்யாதே! (55)
என்றுறுதி சொன்ன இவன் இனியஉரை கேட்டுவந்து
நன்றென்று ணர்ந்துகொண்டோர் நல்வாக்கு வேண்டுகின்றான். (56)

என்னவென்ருல், தன்னலத்துக் கேற்றதொன்றும் வேண்டாமல்
"என்போன்ற பெண்கள் துயர் இனியொழிய வேண்டு"மென்ருள். (57)

தேனே! கனிரசமே! தெவிட்டாத தெள்ளமுதே!
நானேநின் போன்றவர்க்கு நல்வாழ்வு தேடிவைப்பேன். (58)

விதவை மறுமணங்கள் மிகவியற்றிச் சமஉரிமைக்
கதவைத் திறந்துஉங்கள் கண்ணீர் துடைத்திடுவேன். (59)

என்றே சபதமிட்டான், இறுக அணைத்துக் கொண்டாள்
நன்றே நடந்ததிந்த நற்காதல் பூத்தமணம். (60)

காதலனுங் காதலியுங் காதலுடன் வாழவைத்து
காதல்மணமே வளர்ந்து காசினி செழிக்கவென்றே. (61)

சொல்லாற் பொருள்நிறைத்தான் தோகைமறுமணம் வளர்த்தான்
நல்லான் திரிச்சிவிஸ்வ நாதன் நவின்றனனுல். (62)

அன்னவன் அருந்தோழன் அழகியநம் மணவாளன்
நன்னயமாய் ஆராய்ந்து நல்லுதவி செய்தனனே! (63)

கற்றிதனைப் படித்தாரும் கனிந்துகேட் டுவந்தாரும்
மற்றிதனைப் பற்றிமறு மணமியற்றி வாழ்வாரே! (64)

## தந்தை தாய்ப் பேண்.

பிதாவும், மாதாவும் மனிதனுக்கு விசேஷமானவற்றில் முதன்மையானவர்கள். அவர்கள் சந்தோஷமடைந்தாலொழியப் பக்தி யநுஷ்டானங்களில் ஒன்றும் பயன்படாது. ஈசுவரப் பிரேமையினுலே பித்துப்பிடித்த சைதந்நியரைப் பாருங்கள்; அவரும் சந்நியாசம் எடுத்துக் கொள்ளுவதற்கு முன் தமது தாயாருக்கு ஆறுதல் கூறுவதற்கு மிகுந்த சிரமப் பட்டார். அவர் தமது மாதாவை நோக்கி "அம்மா! விசனப் படாதே. நான் அடிக்கடி வந்து உன்னைப் பார்த்துவிட்டுப் போகிறேன்" என்று கூறினுர். ஒருவன் செலுத்தவேண்டிய கடன்கள் அநேகம் உண்டு. அவை, தேவர் கடன், ரிஷிகளின் கடன், பெற்ருேர் கடன், மனைவி கடன் ஆகியவை. பெற்ருேர் கடன் செலுத்தப்பட்டாலொழிய எந்தக்காரியமும் பயனடையாது.

ராமகிருஷ்ண பரமஹம்சர்.

# ஓய்வு வேளை.

('சுரபி' எழுதியது.)

மனிதராக ஜனித்துள்ள ஒவ்வொருவருக்கும் ஓய்வு அவசியம் வேண்டும். 'ஓயாமல் பேசினான்' என்று ஒருவனைக் குறித்துச் சொன்னாலும் அவன் நடு நடுவில் மூச்சு வாங்குவதற்கேனும் ஓய்ந்திருக்க வேண்டும். ஓயாமல் ஒரு காரியமும் செய்யமுடியாது. யூதர்களுடைய ஆகமத்தில் கடவுள், பூமி, சமுத்திரம், சந்திர சூரியர், புல் பூண்டுகள், மிருகங்கள், மனிதன் முதலியவைகளை முறையே ஆறு நாட்களில் சிருஷ்டித்து ஏழாம் நாள் ஓய்ந்திருந்ததாகக் கூறப்பட்டிருக்கிறது. அவர்களுடைய கொள்கைகளை நாம் ஒப்புக்கொள்ளாவிட்டாலும், கடவுளுக்கும் ஓய்வு அவசியம் என்னும் சிந்தாந்தத்தை நாம் ஆமோதிக்காவிட்டாலும் மனிதருக்கு ஓய்வு அவசியம் என்பது வெளிப்படையாகிறது.

உத்தியோக முறைகள் எல்லாவற்றிலும் பள்ளிக்கூடத்திற்கே விடுமுறைகள் அதிகம் என்பது யாவரும் அறிந்ததே. அதிலும் உயர்ந்த வகுப்புகளில், கலாசாலைகளில் வருஷத்தில் ஆறுமாத காலமே உழைப்புக்கென்றும், மிகுந்த நாட்கள் விடுமுறைக்கென்றும் ஒதுக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் அந்த ஆறு மாதங்களையும் தொடர்ச்சியாகக் கொள்வதில்லை. ஆதிநாளில் கும்பகர்ணன் ஆறுமாதம் தூங்கி, ஆறுமாதம் விழித்தான் என்றும், விக்கிரமாதித்தியன் காட்டில் ஆறுமாதமும் நாட்டில் ஆறுமாதமும் வசித்தான் என்றும் நமது புராணங்கள் கூறியபோதிலும் தற்போது அம்முறையை அனுஷ்டிப்பதில்லை; அனுஷ்டிக்கவும் முடியாது. வாரத்திற்கு இரண்டுநாள், பண்டிகை நாட்கள், கடைசியில் கோடைகாலத்தில் சேர்ந்தாற்போல் இரண்டு மாதங்கள் என்று வருஷ முழுவதும் விடுமுறைகளைப் பரப்பி யிருக்கின்றனர்.

ஓய்வு மிகவும் அவசியம். தேக சம்பந்தமான வேலையாக விருந்தபோதிலும் களைப்புத் தீர சற்று ஓயவேண்டும், மூளை சம்பந்தமான வேலையாக விருப்பினும் மூளை சிதறிவிடாம லிருக்கக் கைவேலையை நிறுத்தவேண்டும். அதே போல உண்ணும் விஷயத்திலும் ஜீரணக்கருவிகளுக்கு ஓய்வு அளிக்கவேண்டும். இதுபற்றியே நம் பெரியோர்கள் 'உபவாசம்' என்று சில தினங்களை மாதத்தின் பல பாகங்களில் பரப்பி வைத்து அன்று ஆகாராதிகளை விலக்க வேண்டும் என்றனர். பெண்களுக்கும் மாதமொன்றில் வீட்டு வேலைகளினின்றும் ஓய்வு கொடுக்கவேண்டும் என்னும் நோக்கத்துடன் 'வீட்டு விலக்கு' என்று சில தினங்களை நியமித்திருக்கின்றனர். உலக முழுவதும் விடுமுறையையும் ஓய்வு வேளைகளையும் எதிர்பார்க்கிறது.

ஆனால் ஒரு வேலையும் செய்யாமல் ஓய்ந்திருக்க முடியுமா? வேலை யகப்படாது திண்டாடும் வாலிபர்களுக்குச் சதா விடுமுறைதான். ஆனால் அவர்கள் ஓய்ந்திருக்கிறார்களா? "வேலையில்லாக் கைகளுக்கு 'சாத்தான்' தீங்கிழைக்

கும் தொழிலை யளிக்கிறான்" என்கிறது ஆங்கிலப் பழமொழி. சிறு குழந்தைக்கும் முக்கியமான அலுவல் ஒன்றுமில்லாததால் ஓய்வுவேளை எப்பொழுதும் இருந்துகொண்டிருக்கிறது. ஆனால் ஒன்று மாற்றி மற்றொன்று ஏதோ விஷமம் செய்துகொண்டேதான் இருக்கும் குழந்தைகள். வேலையில்லாமலிருக்கும் சமயம் நாம் வெறும் வெளியை நோக்குவதுபோ லிருக்கிறோம். ஆனால் உண்மையில் மூளை வேலை செய்து கொண்டிருக்கிறது. எதையோ குறித்து யோசிக்கிறோம். அல்லது கையில் எழுதும் கருவியும் காகிதமும் இருந்தால் சித்திரம் வரைவோம்; அல்லது பத்திரிகை யொன்றிற்குக் கட்டுரை எழுதத் தொடங்கிவிடுகிறோம்.

தேகம் மாற்றி மூளை, மூளை மாற்றி தேகம் ஏதாவது வேலை செய்து கொண்டேதான் இருக்கும். உண்மை ஓய்வு என்பது எப்போதும் இல்லை. உண்மையில் என்ன இருக்கிறதென்றால் வேலை மாறுதல். சரித்திர பாடம் அரைமணி நேரம் படித்தால், மேலும் அதையே படித்தல் சிரமத்தைத் தரும் என்பதைக் கருதி அடுத்தபடியாக அரைமணி நேரம் கணக்குப் போடுதல், சற்று நிறுத்தி மற்றொன்று. ஆக மாறுதல் இருந்துக்கொண்டே இருந்தால் போதுமானது. மூளையும் சளைக்காது, சோம்பேறித்தனம் மேலிடாது, நேரமும் வீணாகாது. அனேகர் வக்கீல்களையும் பள்ளிக்கூட உபாத்தியாயர்களையும் பார்த்து, "உங்களுக்கென்ன! சுகமாக அடிக்கடி லீவ் வருகிறது. எங்களைப்போலவா?" என்று வயிற்றெரிச்சல் படுகிறார்கள். ஆனால் தங்கள் கேஸ்களையும், பாடங்களையும் முறையே நன்றாகப் படித்து வைத்துக்கொள்ள அவர்களுக்கு விடுமுறை அவசியம். அவர்கள் வரையில் 'ஓய்வு' என்றால் தொழிற்சாலைக்குச் செல்வதினின்றும் ஓய்வு என்றுதான் அர்த்தம்.

ஆதலால் ஓய்வு காலத்திலும் வேலையை மாற்றிச் செய்வதுதான் மனித இயற்கை. ஒவ்வொரு நிமிஷமும் நாம் ஏதோ செய்துகொண்டுதான் இருக்கிறோம். ஒருவரைப் பார்த்து மற்றொருவர் வயிறு எரிய வேண்டாம். வேலை செய்வது என்று ஏற்பட்டபின் ஒன்றுக்கும் உதவாத வேலையை செய்வதை நீக்கித் தமக்கும் பிறருக்கும் உபயோகத்தைத் தரக்கூடிய வேலையைச் செய்வதுதான் யுக்தம். பிறருக்கு உபயோகமான வேலைகள் அனேகமிருக்கலாம், ஆனால் 'தனக்கு உபயோகமானது' என்று யோசிக்குமிடத்தில் பணமாவது, புகழாவது கொடுக்கக்கூடியதா என்பதைத்தான் சாதாரணமான மனிதர் நோக்குவர். சிற்சில சமயங்களில் பிறருக்கு உதவி செய்யச் செல்வதில் தமக்கும் லாப மிருக்கலாம். அவ்விதமான 'இக' லாபம் ஏற்படாவிட்டாலும் நம்முடைய பெரியோர் கூறியிருக்கும் 'பர' லாபத்தைக் கருதியாகிலும் நாம் ஒவ்வொருவரும் பிறருக்கு உதவி செய்ய முன்வரவேண்டும்.

'பிறந்து யான் பெறும்பேறு என்பது யாவதோ' என்றார் ஸ்ரீராமர். இவ்வுலகத்தில் எவ்வளவோ கோடி ஜனங்கள் இருக்கிறார்கள். ஆயின் அனேகர் பூமிக்குப் பாரமாகவே வாழ்கிறார்கள். அவ்விதமெல்லாம் இல்லாமல் ஒவ்வொருவரும் தம்மால் இயன்றவரையில் பிறருக் குதவிசெய்து தாங்கள் இருக்கும் (இருந்த) இடத்தைத் தாங்கள் பார்த்ததைவிட கொஞ்சம் சுமாராக்க முயலவேண்டும். இதைச் சொல்வது சுலபமாக விருக்கலாம். ஆனால் எதைச் செய்வது என்பது யாருக்கும் ஏற்படுகிறதில்லை. எல்லோருக்கும் பயன்படும் புத்திமதிகளைக் கூறவும் ஒருவராலும் இயலாது.

ஆகவே யான் கூறுவது என்னவெனில் அவரவர்கள் தங்களுக் கேற்படும் ஓய்வு காலங்களை வம்பளப்பதிலும், சீட்டுக் கச்சேரியிலும், வீண் சச்சரவுகளிலும் கழிக்காமல், உபயோகமான விஷயங்களில் செலவழித்தல்தான் உசிதம். படித்த மேதாவிகள் ஆதி கிரந்தங்களைப் படித்து அதிலுள்ள சத் விஷயங்களை உலகிற்குச் சொல்லலாம். உபாத்தியாயர்கள் பிறருக்கு இலவசக் கல்வி புகட்டலாம். ஸ்திரீகள் 'புத்தியைக் கெடுக்கும் நாவல்களை' நீக்கி உபயோகமான சர்க்கா சுழற்றுதல் முதலிய தொழிலை மேற்கொள்ளலாம்.

'அற்பம் அற்பமன்று.' ஐந்து நிமிஷ ஓய்வு காலத்தில் எவ்வளவோ நன்மை புரியலாம். ஆகவே ஓய்வு காலங்களை ஒருவரும் வீணாக்காதீர்கள்.

---

# தாகூரின் இலக்கியத் திறமை



(திரு. S. K. சாமி.)

நம் பாரதநாடு நல்லிசைப் புலவர்கள் பல்லோர் தோன்றுதற்கு இருப்பிடமென்னும் பண்டைப் புகழ் குன்றுவண்ணம்—அத்தகைய கவிஞர்களோ, புலவர்களோ, இந்நாளில் தோன்றவில்லை யென்னும் சொல்லை அடியோடு அடித்தோட்ட சமீபகாலத்திலே தோன்றி ஆங்கிலத்திலும் வங்கநாட்டு மொழியிலும் காவியங்கள் இயற்றும் பணியாற்றி வருகின்றவர் கவிச் சக்கரவர்த்தி ரவீந்திரநாத தாகூர் என்பதை இவ்வுலகம் நன்கறியும்.

ஆழிசூழ் ஊழியின்கண் ஓங்குபுகழ் பெற்றுக் கதிரவனை யொப்ப ஒளி பரப்பி விளங்குகின்ற புலவர்பெருமான் தாகூரின் இலக்கிய ஆற்றலைத் தமியேனின் சிற்றறிவுக்கு எட்டியமட்டும் எடுத்துக் காட்டுவதே இக் கட்டுரையின் நோக்கமாகும். வங்கநாட்டுப் புலவர்களில் பேர்பெற்றவர் பங்கிம சந்திரனும், ரவீந்திரநாதருமேயாமென்பது மறுக்கற்பாலதன்று. இவ்விருவரின் அரிய நூல்களை படிக்கப் படிக்கத் தெவிட்டா யின்பமேற்படுமென்பது திண்ணம். இவர்களின் நூல்கள் பல்வேறு பாஷைகளில் மொழிபெயர்க்கப்பட்டு இலங்குவதிலிருந்தே அவைகளின் மேன்மை விளங்குகின்றதன்றோ.

இலக்கியத்தின் பரந்த பொருளை விரித்துக் கூற எவராலும் இயலாது. இரும்பைக் காந்தம் இழுக்கும் தன்மைபோல் படிப்பவர் மனதை மயக்கும் தன்மை கவிஞரின் இலக்கிய நூல்களுக்குண்டெனப் பொதுவாகப் பொறிப்பதே பொருத்தமுடைத்து என்பதே எமது கருத்து. இலக்கியத் திறமையை விநோதபிரதமாகவோ, அல்லது விஞ்ஞான ரீதியாகவோ மட்டும் குறிப்பிடுவது தகுதியன்று என்பதை மறுக்கவோ, மறைக்கவோ இயலாதென்பது உறுதி. இவ்விரண்டு கொள்கைகளும் ஒன்றிக் காணப்படுவதினுல் ஒன்றுக்கு மட்டும் பிரதம ஸ்தானம் நல்குவது பிசகாகும். இல்லறமென்னும் நல்லறத்தை இதமுடன் நடாத்த ஓர்வித நயம் வேண்டுவதை யொப்ப இலக்கிய நூல்களுக்கும் பிரத்தியேக சக்தியொன்று அமைந்து காணப்படவேண்டுவது இன்றியமையாததாகும். இலக்கிய நூல்களினுல் எழும் ஆனந்தத்தைப் புலவர் அரிஸ்டாட்டல் (Aristotle) திருத்தப்பட்ட ஆனந்தம் (Refined Pleasure) எனக் குறிப்பிடுகின்றார். "பிரமம் வரஸ! ரஸோ! வைஸ!" என்ற சுருதியின் ரகசியமும் இதுதான். ஏனைய புலவர்களுக் கெட்டாத இவ்வித அமானுஷீக ஆற்றலைக் படைத்த அருட் கவியே நமது ரவீந்திரநாத தாகூர்.

தொன்று தொட்டே பாரத மக்களின் ஜீவிய லக்ஷ்யம் ஆத்மீகமாகும். அழிவிலா அழகுவாய்ந்த அவனியில் தோன்றிய நாம் அழகு மயமாகிய அன்பையே அருந் துணையாகக் கொண்டுளோம். இந்த மகத்தத்துவத்தை இக்காலத்தில் மனமுவந்து அருளிய பெருமை தாகூரினுடைய உரிமையேயாகும். "மாயா பிரபஞ்சம்" என்று இயம்பி அவனிவிட்டகன்று அடவியில் காலம் கடத்தவேண்டுமென்ற குறுகிய கொள்கையை பின்பற்றுவது பிசகென்பது கவியரசரது நூல்களில் ஒலியும் எதிரொலியுமாய்ப் பரந்து காணப்படுகின்றன. "இல்வாழ்வு இன்பமுடைத்து" என்பது கவிஞரின் கருத்தாகும். இதை

விளக்கி அருளியிருப்பதாவது "உலகம் இன்பம் நிறைந்ததோ, துன்பம் நிரம்பியதோ வென்பதை கவனிக்கவேண்டாம். ஆனால் என் கண்களை அவனியில் தோன்றும் ஆனந்தக் காட்சியிலேயே ஈடுபடுத்துவேன்." இளம்பிராயத்தில் தமக்கு அந்தர் தர்சனம் (Inner vision) கிட்டியதாகவும் ஒப்புக்கொள்கின்றார். இக் கருத்தைத் தமது பாடல்களிலெல்லாம் விளக்க முயன்றதாகவும் குறிப்பிடுகின்றார் (I have tried to explain it in all my poems). ஜயதேவன், சைதன்னியன், கபீர் முதலியவர்களின் நூல்களே கவியரசரின் வழிகாட்டியாக ஆதியில் அமைந்திருந்தன. கபீரின் பாடல்களை கம்பீரமாக கவிஞர் மொழிபெயர்த்துளார். புலமையில் புலவருக்கொப்பாக சுபீஸத்தை (Sufism) குறிப்பிடுவது நலமாகும். இதின் அடிச் சுவடுகளை பின்பற்றியே புலவர் ஆதியில் சென்றுளாரென கூறுவதில் பிசகொன்றுமில்லை.

பாடல்கள்—சிறுகதை-நாவல்-பிரபந்தம் என நால்வகையாகக் கவிஞரின் இலக்கிய வேலையை வகுப்பதே நலமாகும். ஆதியில் குறிப்பிட்டதில் தலைமைப் பதவியைத் தாங்குவது கீதாஞ்சலி யென்பதை மறுக்க எவராலும் இயலாதென்பது முக்காலும் உறுதி. சித்திரா (Chitra), போஸ்டாபீசு (Post Office) இவைகளை இரண்டாமினத்தில் சேர்ப்பது நலமாகும். இவைகளையெல்லாம் குறித்துத் தனித்தனியாகக் கூறுவதானால் பத்திரிகையில் இடம் போதாதென்று எண்ணிச் சுருக்கமாகக் கூறுவோம்.

அகில உலக அபிமானத்திற்கு ஆதி காரணமாகிய நோபல் வெகுமதி பெற ஏதுவா யிலக்கியது கீதாஞ்சலி யென்பதை யாவருமறிவர். அந்தராத்மாவை அசைத்திழுத்து ஆன்மார்த்தத்தை அபிவிருத்தி செய்து மேனாட்டாரையும் அதிசயிக்கச்செய்து, ஆனந்தவாரிதியில் அமிழ்த்திய ஆற்றல் 'கீதாஞ்சலி'க் குண்டென்பது அனுபவ சித்தாந்தம். அதைப் பலதடவை படித்தாலும் பல்வேறு விதமான இன்பம் பயக்குமென்பது எமது சொந்த அனுபவமாகும். (The flower of English Prose) என்று கீதாஞ்சலியின் மொழிபெயர்ப்பைக் குறித்து ஆங்கிலேய பெரியாரொருவர் அருளியுளார். Our temple of worship where outward nature and human soul meet in Union என்பது மேனாட்டு மேதாவியொருவர் கீதாஞ்சலியைப்பற்றி வியந்து கூறிய மொழிகளாகும். மானசீக ஆராதனை கீதாஞ்சலியில் பிரதிபிம்பித்து காணப் படுகின்றன. ஆத்ம சக்தியின் அபார ஆற்றலை அப்படியே அருளியிருக்கின்றார்.

கவிஞரின் கதைகள் தெவிட்டா யின்ப மூட்டுவதாகும். கதை யெழுதுவதில் கவியரசரின் ஆற்றலை அடித்தோட்ட எவராலும் இயலாதென்று துணிந்து கூறலாம். கதையின் போக்கு, பல்வேறு பாவனைகளை எடுத்துக்காட்டும் எளிய முறை நவரசங்களின் நடனம் ஆசயங்களின் அமைப்பு—இவை தாகூரின் சிறுகதைகளின் தனி லக்ஷணங்களாகுமெனக் குறிப்பிட்டால் தவறாகாது. அன்பின் பெருக்கைப் பருக ஆசை கொண்டோர் அவரது சிறுகதைகளை படிக்கவேண்டும். அன்பெனும் அலைகள் ததும்பும் ஆழியின்கண் குதித்து நீந்த அவாவுற்றோர் அவரது கதைகளை நோக்க வேண்டும்.

நாவல் எழுதுவதில் கவிஞருக்கு வன்மை போதாதென்பது அறிஞர் பலரின் அபிப்பிராயமாகும். ஓவிய வல்லோனும், காவிய வல்லோனும் ஒன்றில் ஒருமைப் படுகின்றனர். அஃதாவது ஓவியன் தான் காணும் இயற்கைப் பொருளுருவின் திறங்களைப் பலவகை நிறங்கொண்டு துகிலிகையால் அழகுபெறக்

கிழியில் தீட்டிக் காட்டுகின்றான். காவியம் செய்யும் கவிஞனும் அவ்வியற்கைப் பொருளுருவின் திறங்களைத் தன் கற்பனு சக்தி, சொல், இசை, முதலியவைகளால் தம் பாட்டுகளில் கனிந்து தோன்ற எடுத்துக் காட்டுகின்றான். தாகூர் அங்ஙனம் பேரெழிலில் ஈடுபட்டின்புற்றா ரென்பது அவர் பாக்களில் பெரிதும் தெரியக் கிடக்கின்றது.

ஆங்கிலத்தில் (Mysticism) என்று கூறும் ஆத்மீக மனப்பான்மையும் அக்கொள்கையை வெளிக்காட்டும் (Symbolism) என்று இயம்பும் நவீன அமைப்பும் கவியரசரின் இலக்கிய நூல்களின் ஜீவநாடி என்பதை அழுத்தம் திருத்தமாக ஈண்டு குறிப்பிடுகிறேன். தாய்நாட்டின் விடுதலைக்காக தம்மாலியன்ற மட்டும் உழைத்துவரும் உத்தம தேசபக்தர்களில் புலவர் பெருமானுமொருவ ரென்பது கண்கூடு. இந்தியாவின் இருதயம் துடிப்பது கவிஞரின் இலக்கிய வீணைகானத்திலிருந்து எழும் ஓசையில் மிளிர்கின்றன. Where the mind is without fear என்று ஆரம்பிக்கும் ரவீந்தரரின் பிரார்த்தனை, பாரத மக்கள் அனைவரையும் மயிர்சிலிர்க்கச் செய்யுமென்பது திண்ணம். "நாட்டின் கௌரவத்தை நிலைநாட்டுமின்" என்பது அவர் நிறுவிய சாந்தி நிகேதனத்தின் அடிப்படையான கொள்கையாகும். இக் கொள்கையின் சீரிய கருத்தையே அவரது அரிய நூல்களில் ஒலியும் எதிரொலியுமாகக் காண்கின்றன. மஹாகவி ரவீந்திரநாதரின் சாந்தி நிகேதனம் இந்தியாவிலுள்ள யாத்திரை ஸ்தலங்களில் ஒன்றாக விளங்குகிறது. பலதிறப்பட்ட ஜாதிகளின் நாகரீகம், இலக்கியம், கலைகள் முதலியவைகளைப் பார்ப்பதற்கும், படிப்பதற்கும், பாண்டித்தியம் அடைவதற்கும், ஆராய்ச்சி செய்வதற்கும் அரிய சந்தர்ப்பம் அளிக்கும் சாதனம் விசுவ பாரதியாகும். இவ்விடத்தில் பல்வேறு நாடுகளில்—மாகாணங்களிலிருந்து வந்த பண்டிதர்கள் எப்பொழுதும் புத்தறிவுபெற்ற வண்ணமாகவே யிருக்கின்றனர். இத்தகைய அரும் பெரும் ஸ்தாபனத்தை இந்தியா நாடடையும் பாக்கியத்திற்கு மூல காரணம், ரவீந்திரரைப் பாரத தேவி ஈன்றதேயாம். ஆகவே கவிச் சக்கரவர்த்தியாகிய தாகூரின் அரிய நூல்களைப் படித்து ஆத்மசக்தியை பெருக்கி அடிமைத் தளையை அறுப்போமாக. வந்தேமாதரம்.

## பக்தியின் சக்தி.

ஒருகவி, பக்தியைப் புலிக்கு உவமை காட்டியிருக்கிறார். புலியானது இதர மிருகங்களை அடித்துக் கொன்று தின்பது போல, பக்தியும் மனிதனுடைய விரோதிகளாகிய காமக் குரோதாதிகளை யெல்லாம் கொன்று தின்றுவிடுகிறது. ஒரு தரம் ஈசுவர பக்தி பூரணமாய் உண்டாய்விட்டால் காமக் குரோதாதி தீய உணர்ச்சிகள் அடியோடு அழிக்கப்பட்டுவிடுகின்றன. பிருந்தாவனத்துக் கோபிகைகள் தாங்கள் கிருஷ்ணனிடத்து வைத்திருந்த பக்தியின் மூலமாய் அந்த நிலைமையை அடைந்தார்கள்.

ராமகிருஷ்ண பரமஹம்சர்.

# சிறுவர் விளையாட்டுக்கள்



(வீ· சங்கரையர்.)



## 5. பூனைப் பந்து. (Ball Puss.)

ஒரு சதுரத்தில் பல இடங்களில் சமதூரத்தில் பிள்ளைகளை நிறுத்து. நடுவில் ஒருவன் பந்துடனிருக்கவேண்டும்; சுற்றியிருப்பவர்கள் இடங்களை மாற்றிக்கொள்ளவேண்டும்; அப்படி அவர்கள் இடம்விட்டு ஓடும் சமயம் நடுவிலுள்ளவன் பந்தை யார்மீதாவது எறியவேண்டும்; எவன்மீது பந்து எறியப்பட்டதோ அவன் நடுவில் போகவேண்டும்; நடுவிலிருந்தவன் அவனிடத்துக்குப் போகவேண்டும்.

## 6. கவட்டிடை வட்டப் பந்து. (Circle stride ball.)

ஒருவன் நடுவிலும் மற்றவர்கள் வட்டமாகவும் கால்களை விரித்துக்கொண்டு ஒவ்வொருவன் வலது பாதமும் அடுத்தவன் இடது பாதமும் தொட்டுக் கொண்டு நிற்கவேண்டும். நடுவிலுள்ளவன் பந்தை வட்டத்திற்கு வெளியே போகும்படி அடிக்கவேண்டும். வட்டத்திலிருப்பவர்கள் தங்கள் கைகளால் கால்களுக்கு இடையில்கூட வெளியே விடாமல் பந்தை பாதுகாக்கவேண்டும். யாருடைய இரு கால்களுக்கும் நடுவேயே அல்லது யாருடைய வலது பக்கத்தில் கூட பந்து வெளியே போகிறதோ அவன் நடு மனிதனுகவேண்டும். நடுவிலிருந்தவன் அவனிடத்துக்கு வரவேண்டும். தந்திரமாக ஏமாற்றிப் பந்தை நடுவிலுள்ளவன் பல இடங்களுக்கு அனுப்பலாம்.

## 7. வட்டப் பந்து. (Circle ball.)

சுமார் 7 அடி உயரமுள்ள ஒரு சுவரின் அடியிலிருந்து 4 அடி தூரத்தில் ஒரு வட்டம் போடவேண்டும். ஒவ்வொருவராகப் பந்தைச் சுவரின்மேல் எறியவேண்டும்; அப் பந்து வட்டத்திற்குள் விழவேண்டும். இரு கக்ஷியில் எவர்கள் பந்து வட்டத்திற்குள் ஜாஸ்தி எண்ணிக்கை விழுகிறதோ அக்கக்ஷியே ஜயித்ததாகும்.

## 8. தலைவரைத் தொடர். (Follow your leader.)

பையன்கள் ஒருவன்பின் ஒருவனுக நிற்கவேண்டும். முதல் பையன் தலைவராக வழிகாட்டவேண்டும். அவன், அவர்களை, நடந்தும், ஓடியும், தள்ளியும், மேட்டில் கூடவும், பள்ளத்தில் கூடவும் அழைத்துச் செல்லவேண்டும். மற்றவர்கள் அவன் செய்வதெல்லாம் பார்த்துச் செய்யவேண்டும். தவறினவன் கடைசிக்கு போய் நிற்கவேண்டும். தொடரவேண்டும்.

## 9. வட்டத் தொடர். (Round Tag.)

படத்தில் காட்டியபடி இரண்டு வட்டங்கள் 4 கெஜதூரத்தில் போட்டுப் பையன்களை ஜோடியாக உள் நோக்கி நிறுத்தவேண்டும். ஒருவன் ஒரு ஜோடியின் முன்னும், மற்றொருவன் அவன் எதிரேயும் நிற்கவேண்டும். A-என்பவன்

B-க்குப் பின்னடி நிற்கும் மூன்றாவனை பிடிக்க ஓடவேண்டியது. அப்பொழுது அவன் A கையில் அகப்பட்டால் ஏதாவது ஜோடிகளின் முன் பக்கத்துக்கு ஓடிப்போய் நிற்கவேண்டும். அதற்குள் வட்டத்திற்குள் நின்றவன் (B) முதல் வட்டத்திலும், அங்கிருந்தவன் அதன் பின் வட்டத்திற்கும் மாறவேண்டும். மூன்றுபேர்களில் கடைசியிலிருப்பவனை பிடிக்க A முயலவேண்டும். அவன் தப்பிக்கவேண்டும். பிடிபட்டால், பிடிபட்டவன் A வேலையைச் செய்யவேண்டும்.




## 10. ஜெயிலிலடைப்பு. (Take him Prisoner.)

30 கெஜ தூரத்தில் இரு கக்ஷிகளும் நிற்கவேண்டும். ஒரு கக்ஷியிலுள்ள ஒருவன் ஓடி எதிர்க் கக்ஷியிலுள்ள ஒருவனைத் தொட்டுவிட்டு உடனே திரும்பி ஓடிவரவேண்டும். தொடப்பட்டவன் இவனைத் தொடர்ந்து தொடவேண்டும். தொட்டால் முதல் கக்ஷியிலிருந்து ஓடினவனும், தொடாவிட்டால் இரண்டாம் கக்ஷியிலிருந்து தொடர்ந்தவனும் ஜயிலிலடைபடுவான். ஒரு கக்ஷியிலுள்ளவர்கள் பூராவும் அடைபடும்வரையிலும் விளையாடவேண்டும்.

## 11. சிங்கமும் ஆடும்.

கைகளைப் பிடித்துக்கொண்டு பையன்கள் வட்டமாக நிற்கவேண்டும். ஒருவன் (ஆடு) வட்டத்திற்குள்ளும், மற்றொருவன் (சிங்கம்) வட்டத்திற்கு வெளியேயும் இருக்கவேண்டும். சிங்கம் ஆட்டைப் பிடிக்க முயலவேண்டும். ஆனால் பையன்கள் உள்ளே விடக்கூடாது. தந்திரமாக சிங்கம் உள்ளே நுழைந்துவிட்டாலோ உடனே பையன்கள் ஆட்டை வெளியே விட்டுவிடவேண்டும். சிங்கம் ஆட்டைத் தொட்டுவிட்டால் ஆடு சிங்கமாகவேண்டும். சிங்கம் வேறொருவனை ஆடாக யிருக்கச்சொல்லவேண்டும் அல்லது எந்த இருவர்களுக்கு நடுவே சிங்கம் உள்ளே சென்றதோ அவ்விருவர்களும் ஆடாகவும் சிங்கமாகவும் மாறவேண்டும்.

## 12. சாட்டையடி. (Whip tag.)

பையன்கள் வட்டமாக நடு மத்தியை நோக்கி உட்காரவேண்டும். ஒருவன் ஒரு துணியால் செய்த சாட்டையை எடுத்துக்கொண்டு வட்டத்தைச் சுற்றி ஓடவேண்டும். ஓடும்பொழுது ஒருவன் பின்னால் அவனுக்குத் தெரியாமல் சாட்டையை போட்டுவிட்டு ஓடவேண்டும். அந்தப் பையன் அதைக் கண்டுபிடிக்காவிட்டால் அவனை அவ்விடத்துக்குவந்து அந்தச் சாட்டையால் அடித்து ஒரு வட்டம் அவனிடம் வரையிலும் விரட்டவேண்டும். பிறகு அவனிடத்தில் அவனே உட்காரவேண்டும். பிறகும் முதல்வன், தன் சாட்டையை எடுத்துக்கொண்டு முன்போல் செய்யவேண்டும். சாட்டையை யாராவது ஒருவன் எடுத்தால் அவன் முதல்வனை விரட்டலாம். முதல்வன் இவனிடத்தில் உட்காரவேண்டும். ஒருவனும் பின்புறம் பார்க்கக்கூடாது.

## 13. நொண்டி. (Hop.)

ஒரு வட்டம் வரையவும்; நடுவில் ஒரு செங்கல்லின்மீது ஒரு சிறு கல்லை வைக்கவும்; வட்டத்தின் வெளியே நின்றுகொண்டு மூன்று கல்களை நடுக் கல்லின்மேல் எறியவும்; மூன்றும் தப்பிவிட்டால், அவன் வட்டத்தின் மறு பக்கம் போய் மறுபடி திரும்பி தன்னிடத்துக்கு நொண்டிக்கொண்டு வரவேண்டும்.

## 14. செங்கலேறிதல். (Kicking the Brick.)

ஒரு பாதிச் செங்கலை ஒரு முழுச் செங்கலின்மீது வைக்கவும். ஒரு காவற்காரன் அதன் பக்கத்திலிருக்கவேண்டும். வேறொருவன் அந்தப் பாதிச் செங்கலை எடுத்து எட்டித் தூரத்தில் விழும்படி எறியவேண்டும். காவற்காரன் அதை எடுத்துக்கொண்டுவரும் முன்னால் மற்றவர்கள் யாவரும் எங்காவது சென்று ஒளிந்துகொள்ளவேண்டும். காவற்காரன் அரைச் செங்கலை முழுச் செங்கலில் வைத்துவிட்டு அவர்களைத் தேடவேண்டும். ஒருவனிருக்குமிடந் தெரிந்தால் உடனே அவன் பெயரைக் கூப்பிட்டுவிட்டு அரைச் செங்கலைத் தொடவேண்டும். காவற்காரன் அரைச் செங்கலைத் தொட மறந்துவிட்டால், அகப்பட்டவன் அரைச் செங்கலை ஓடிச்சென்று எடுத்து எறிந்துவிட்டு ஒளிந்துவிடவேண்டும். காவற்காரன் மற்வர்களைத் தேடிக்கொண்டிருக்கும்பொழுது, அவனுக்குத் தெரியாமல் அரைச் செங்கலை எடுத்து எறிந்துவிடலாம். எறிவதைக் காவற்காரன் கண்டுவிட்டால் அவனும் ஜயிலில், கண்டு பிடிக்கப் பட்டவனைப்போல அடைக்கப்படவேண்டும். அவன் எறிவதை காவற்காரன் கண்டு பிடிக்காவிட்டால் ஜயிலில் அதுவரையிலும் விடுபட்டவர்கள் பூராவும் முன்போல் ஓடி ஒளியவேண்டும். ஆனால் அரைச் செங்கலை எறிந்தவுடன் எறிந்தவன் "செங்கலை எறிந்துவிட்டேன்" என்று கூவவேண்டும். இப்படி எல்லாரும் ஜயிலில் அடைபடுவது வரையிலும் விளையாடவேண்டும்.

## 15. புஜக்கோவை பாட்டு. (Musical arms.)

பிள்ளைகளை இரண்டாகப் பிரிக்கவும், ஒன்றில் ஒருவன் ஜாஸ்தி யிருக்க வேண்டும். குறைந்த எண்ணிக்கையுள்ள கக்ஷி ஒரு வரிசையாக ஒற்றை எண்ணுள்ளவர்கள் வலது கைகளையும் இரட்டை எண்ணுள்ளவர்கள் இடது கைகளையும் பிடித்தமாதிரி இடுப்பைப் பிடித்துக்கொண்டு நிற்கவேண்டும். அதிக எண்ணிக்கையுள்ள கக்ஷி முதல் கக்ஷியைச் சுற்றிவரவேண்டும். அப்பொழுது சிறுவாய் வாத்தியம் உபாத்தியாயர் வாசிக்கவேண்டும். பாட்டு நிறுத்தப்பட்டவுடன் சுற்றி வருபவர்களில் ஒவ்வொருவனும் நிற்பவர்களில் ஒவ்வொருவனுடைய மற்றொரு கைகளைப் பிடித்துக்கொள்ளவேண்டும். இவர்களில் அப்படிச் செய்யாதவனும் முதல் கட்சியின் கடைசிப் பையனும் வெளியேற வேண்டும். இப்படியே விளையாடவேண்டும்.

## 16. ம்யூசிகல் பிளாப். (Musical flop.)

பையன்களெல்லாம் வட்டமாகச் சுற்றிவரவேண்டும்; அப்பொழுது ஒரு பையன் சிறுவாய் வாத்தியம் வாசிக்கவேண்டும். பாட்டு நின்றவுடன் எல்லாரும் கீழே உட்காரவேண்டும். கடைசியாக உட்காருகின்றவன் வெளியே போகவேண்டும். இப்படியே கடைசி ஒரு பையன் மீதியாகும் வரையிலும் செய்யவேண்டும்.

## 17. கோடி காத்தல். (Guarding flag.)

ஒரு கொடி நடுவிலும், அதைச் சுற்றி 5 கெஜ விசாலமுள்ள வட்டம், வட்டத்திற்குள் ஒரு காவற்காரன், அதற்கு இரு பக்கங்களில் சம தூரத்தில் 15 கஜ தூரத்தில் இரு கக்ஷிகளும் நிற்கவேண்டும். ஒவ்வொரு கக்ஷியிலுள்ளவர்களும் கொடியைக் கொண்டுபோக முயற்சி யெடுக்கவேண்டும். காவற்காரன் தொட்டால் அவன் வெளியேறிவிடவேண்டும். கொடியை எடுக்கிறவன் காவற்காரனாக யிருக்கவேண்டும். இப்படியே மாற்றி மாற்றி விளையாடவும்.

## 18. சாதாரத் தபால். (General Post.)

ஒருவன் கண்ணைக் கட்டவேண்டும். மற்றவர்களுக்குப் பல பட்டணங்களின் பெயர்களைக் கொடுக்கவேண்டும். அவர்கள் வட்டமாகவும் குருடன் நடுவிலும் நிற்கவேண்டும். உபாத்தியாயர் இரு பட்டணங்களைக் கூப்பிடவேண்டும். அவர்கள் இடம் மாற்றிக்கொள்ளவேண்டும். அப்பொழுது குருடன் அவர்களைப் பிடிக்க முயலவேண்டும். அகப்பட்டால், அகப்பட்டவன் குருடனாகவேண்டும். அவ்வளவுபேர்களும் இடம் மாறின பிறகும் ஒருவனும் அகப்படாவிட்டால், சாதாரணத் தபால் என்று உபாத்தியாயர் சொல்லவேண்டும். அப்பொழுது எல்லாரும் அவரவர்களுக்கு எதிர்ப்பக்கத்துக்குப் போகவேண்டும். இப்படி எல்லாரும் போகின்ற அவசரத்தில் குருடன் நிச்சயமாக யாரையாவது ஒருவனைப் பிடிக்க இடமுண்டு. அப்படிப் பிடிக்கப்பட்டவன் குருடனாகவேண்டும்.

குறிப்பு:—உபாத்தியாயர் இரு பட்டணங்களைக் கூப்பிட்டவுடன்

கார்ட் என்றால்-காக்கையைப்போல் தவ்வித் தவ்வி நடக்கவேண்டும்.

கவர் என்றால் நடந்து போகவேண்டும்.

தந்தி என்றால் ஓடவேண்டும்.

பார்ஸல் என்றால் பாம்புபோல கைகால்களைத் தரையில் ஊன்றிப் போகவேண்டும்.

## 19. அல்யாபல்யா.

பையன்கள் சுமார் 2 அடி தூரம் விட்டு வட்டமாக நிற்கவேண்டும். உள்ளே ஒருவன் இருக்கவேண்டும். உள்ளே யுள்ளவன் வெளியே செல்ல முயலவேண்டும். எந்தப் பையனுடைய வலது பக்கம் கூடச் சென்றானோ அவன் உள்ளேயும் உள்ளே யிருந்தவன் அவனிடத்துக்கும் செல்லவேண்டும்.

## 20. சடுகுடு.

நடுவில் ஒரு கோடும், அதிலிருந்து இருபுறமும் சுமார் 20 கெஜ தூரத்தில் சமதூரக் கோடுகள் ஒவ்வொன்றும் போடவும். குடுகுடு அல்லது சடுகுடு என்று ஒரே சுவாசத்தில் மத்திய ரேகையைத் தாண்டி எதிர்க் கக்ஷிக்கு ஒவ்வொருவனும் போய்த் திரும்பவேண்டும். எதிர்க் கக்ஷிக்காரனைத் தொட்டால் தொடப்பட்டவன் வெளியேறவேண்டும். தொடச் சென்றவன் சுவாசம் விட்டபிறகு எதிர்க் கக்ஷிக்காரன் தொட்டால் சென்றவன் வெளியேறவேண்டும். ஒரே சுவாசத்தோடு தன்னிடத்துக்கு வந்துவிடவேண்டும். பிறகு இதுபோல எதிர் கக்ஷிக்காரன் செய்யவேண்டும். எந்தக் கக்ஷி அதிக ஆட்களை வெளியேற்றுகிறதோ அதுவே ஜெயித்த கக்ஷி.

# அவசியமற்ற கேள்விகள்















# பிராட்டியார்



(ஸ்ரீமதி. பண்டிதை-அசலாம்பிகை அம்மையார்.)

நிறைமதி வன்மையுடையாரே யாயினும் தாம் எண்ணிய காரியம் முற்றுப் பெறுவதில் எல்லை கடந்த ஊக்கத்தினை மேற்கொள்ளின், அதற்கு மாறாகிய நீதிகளை சிந்திக்கத் தவறுவது இன்றும் கண்கூடு. ஊக்கம் சிறந்ததேயாயினும் அவ்வூக்கமும் சில சமயம் மேற்கண்ட காரணத்தினால் தோல்வி யுறுவதியல்பு. இது பற்றியே நமது தாயுமானார் "வசன நிர்வாக ரென்றபேரும், பூராயமா யொன்று பேசுமிடம் ஒன்றைப் புலம்புவார், சிவராத்திரிப்போது துயிலோமென்ற விரதியரும் அரிதுயிற்போலே யிருந்து துயில்வார்" என்று அறிவுறுத்தி யருளினார் போலும். எத்துணை யெத்துணைத் தகுதியுடையாரே யாயினும் மனிதராய்ப் பிறந்தோர் தவறுதல் இயற்கை யென்னும் நியதிக்கு அநுமானும் இங்கு உதாரண புருடரானார் எனில் ஏனையோர் அவ்வபாயத்தினின்றும் மீள முடியுமோ? ஆதலின் இராம தூதனாகிய அநுமான் தனதொப்புவமையற்ற பேராற்றலுக் கேற்பப் பிரிந்த காதலர்களை ஒன்று சேர்ப்பதாகிய இத்தூய பணியினால் மாயாப் புகழ்பெற விழைந்தார். தனது தலைவனுக்கு எதிர்பாராத மகிழ்ச்சியை யளிக்க விழைந்தார். பிராட்டியாரின் துன்பக்கனலை அணைக்கத் துணிந்தார்.

ஆனால் பிராட்டியாரோ தனது தெய்வக்கற்பினுக்கு அடாத செயல் இதுவெனத் தெற்றென வுணர்ந்தார். கோடி கோடி யின்னல்கள் குவிக்க நேரினும் பாடுறும் கற்பின் பெருமையைத் தளர்த்தல் உத்தமமடந்தையர்க் கொண்ணுமோ? ஒருதலைத் தீர்மானமாகத் தான் எண்ணியது தகுதியெனக் கொண்ட அநுமான் பிராட்டியாரின் அபிப்பிராயத்தினை வரவேற்காமலே,

"வேறினிவிளம்பவுள தன்று விதியால் இப்
பேறுபெற வென்கண் அருள் தந்தருளு பின்போய்

ஆறா துயரம் சொல்இளவஞ்சி அடி யன்றோன்
எறுகடிதென்று தொழுதினனடி பணிந்தான்."

என்று விரைந்து தனது தோளில் ஆரோகணித் தருளும்படியும் கூறி நின்றார். இதனைக் கேட்ட பிராட்டியார் நிலைமை மிகவும் பொறுப்பு வாய்ந்ததாயிற்று. என் செய்வார்; தன்பால் தாயன்புடையவன் என்பதில் சிறிதும் ஐயமில்லை. என்னினும் தனது பெண்மை மாண்பிற் கொவ்வாத செயலைச் செய்யுமாறு அன்பின் மிகுதியால் இவன் விரும்புகின்றான். நமக்குப் பேருதவியாளனாகிய இவன் கொள்கை தவறெனக் கண்டித்து அறிவுறுத்துவோமெனில் பெருந்துயர் அடைந்து மனம் உளைவான். அன்பு மிகுதியினால் அறிவிழப்பதியல்பு. ஆதலின் நயம்படு முறையினால் மறுப்பதே கடன் எனத் தீர்மானிக்கின்றார்.

இவ்வாறு தீர்மானித்த தேவியார் தனது கருத்தை வெளியிடக் கையாண்ட முறை பிராட்டியாரின் பெண்மை யியல்பிற்கே பெரும்பொலிவு நல்குவதாகும். கவிச்சக்ரவர்த்தி யென்னும் சிறப்புக்குக் கம்பநாடர் உரிமை பெற்றது இங்கமைத்த செய்யுளை நோக்கச் சிறியதாகிய சிறப்பென்றே சொல்லுதல் பொருந்தும். சிறந்த கவிகட் கமைந்த பேராற்றல் அந்தந்தப் பாத்திரங்களாகவே தம்மை அமைத்துக் கொள்ளுதல்தான். எனினும் இங்கு உத்தமப்பெண்மைக்கு உயிர்நிலையாகிய தெய்வக் கற்பின் உணர்ச்சியை எட்டுதல் ஆண்பாற்றிறமைக்கும் அரியதொன்றாகும். நமது கவி அதிலும் வெற்றி பெற்றார். முக்கியமாக ஈண்டு பிராட்டியாருக்கு ஏற்க முடியாத விஷயம் அன்னிய ஆடவனின் ஸ்பரிசமே. மனதில் மாசில்லாத நிலையில் ஸ்பரிசத்தினால் குற்றம் இல்லையென ஆண்பாலுள்ளம் கருதும். மனதில் மாசில்லையாயினும் ஸ்பரிசம் ஒழுங்கீனம் குற்றம் எனவே பெண்மையுள்ளம் திடமாக எதிர்க்கும். இக் கருத்தினைத் தற்கால நவநாகரீகர்கள் மூடக்கொள்கை, யதாபூர்வீகம் என இகழ்ந்துரைப்பர். பிறர் இகழ்வ ரென்பதற்குப் பயந்து மனவுணர்ச்சியை மாய்க்க முடியாது. இன்னும் பெண்மையுள்ளம் தம்மைப் போன்ற பெண்களின் ஸ்பரிசத்தையும் சர்வசாதாரணமாகப் பாவிப்பதில்லை யென்பது அநுபவவுண்மை. தொட்டாற்சிணுங்கி யென்னும் ஓர் வகை மூலிகை மனிதர் ஸ்பரிசத்தால் ஒடுங்குவது போலப் பெண்தன்மையும் பிறர் ஸ்பரிசத்தால் உணர்ச்சிகுன்றி மாறுதலடைவது இயற்கை. ஒத்த பாலினராகிய பிறரையே ஒழுக்க மின்மையாலும், பிறப்பு வகையாலும், பழக்க மின்மையினாலும் தொடக்கூசும் பெண்பால் இனத்திற் பிறந்த நமது ஜனகநந்தனி அநுமானது ஸ்பரிசத்திற்கு எவ்விதம் துணிவார். ஆகவே அக்கருத்தைப் பின்வரும்

"அரியதன்று நின்னாற்றலுக் கேற்றதே
தெரிய வெண்ணினை செய்யவும் செய்தியே

உரியதன்றென ஓர்கின்ற துண்டதென்
பெரிய பேதமைச் சின்மதிப் பெண்மையால்."

என்ற அழகிய செய்யுளால் மெல்ல விளக்கலானார். முதலில் உனது வல்லமைக்கு ஏற்ற தொன்றையே எண்ணினாய். நீ அதனைச் செய்து முடிக்கவும் கூடும். எனினும் அச்செயல் தகுதியல்ல என்பதாக என்மனம் கருதுகின்றது. அவ்வாறு கருதுவதற்குக் காரணம் எனது பெண்மைத் தன்மையே தான். அப்பெண்மையின் இயல்பு பொதுவாக ஆடவர் மிகச் சிறியதென எண்ணும் விஷயங்களையும், மிகப் பெரிதாக மதிக்கும் தன்மை யுடையது. அதன் காரணமாகப் பெரிய பேதமை யென்று ஆடவரால் அழைக்கப்படும் கவசம் பூண்டதாகும். உண்மையில் இவ்விரண்டும் ஆன்றோர் நிறுவிய ஒழுக்கத்தைப் பின்பற்றும் உறுதியும், நுட்பமாக ஆராயும் இயற்கையும், என்பது தெளிவு. தன் கொள்கை முற்றிலும் சரியானதென்று தெரிந்திருந்தும் அதனைக் கம்பீரமாக வெளியிட விரும்பாமல் தனது பெண்மையின் இயற்கையுணர்ச்சிகளைத் தாழ்த்தியும் அவ்வுணர்ச்சியை நீதியென்றே அறிவுடைமையென்றே, எண்ண முடியாத ஆண்பால் இனத்திற் பிறந்தவராகிய அநுமானது சங்கற்பத்தை உயர்த்தியும் ஈண்டு குறிப்பிட்ட சாதுரியத்தையும் பணிவினையும் சொல்வன்மையையும் எவ்வாறு போற்றுவது? இன்றும் ஆன்றோர் ஒழுக்கத்தினைப் பின்பற்றுபவர்களை அதற்கு எதிரானோர் பேதையர் என்றழைப்பது கண்கூடன்றோ? அன்னாரைக் குறுகிய புத்தியுடையார் என்றும் தீர்மானிக்கின்றனர், இவ்விரண்டு மகுடங்களையும் தங்கள் கட்சியே சிறந்ததென எண்ணுவோர் தமது கொள்கைக்கு இணங்காதவர்களுக்குச் சூட்டுதல் இயல்பாதலினால் பிராட்டியார் தானே தனக்கு அம்மகுடங்களைப் புனைந்து கொண்டார். அதிலும் இவ்வெண்ணம் பெண்மைப் பிறப்பினோடு பிறந்த தொன்றாதலின் இயற்கையாயிற்று. இடையில் மாற்றக்கூடிய தன்று என்பதும் உட்குறிப்பு. அன்றியும் ஆண்பாலிற் குரித்தாகிய ஆண்மையும் உடன்பிறந்த தாதலினால் அதனையும் இடையில் மாற்றுதல் முடியாது. ஆண்மையை யிழந்த ஆடவனும் பெண்மையை யிழந்த பெண்ணும் சிறுமையுற்றவரே யாவர். ஆதலின் நீ எண்ணினது உனது ஆண்பாலியல்புக் கேற்றதேயாகும். எனது பெண்மை இயல்புக்கேற்ப என் கருத்தும் எனக்குத் தகுதியானதே என்ற பொருள் ஆழத்தில் மிளிர்கின்றது. சிறை மீட்சியில் இருவர்க்குள்ள ஊக்கமும் ஒரே தன்மையுடைய தெனினும் பாலின் இயற்கையினால் இருவரும் ஒன்றுபட்ட முடிவைக் கொள்ளவில்லை. இதுவே வேற்றுமை யெனப்படும் இலக்கணம். இத்துணை நயம்பட ஒன்று மறியாது அஞ்சுபவர் போலப் பிராட்டியார் மறுத்துரைத்த அழகினைப் பாராட்டியே கவி தூய மென்சொல் என முன்னதாகப் போற்றுகின்றார். கருத்தோ மிகப் புனிதமானது; சொல்லும் சாயையோ மிகவும் மென்மை வாய்ந்தது என்பது அதன் உட்கருத்தாகும்.

இனி அவ்வாறு அநுமான் கருதிய செயல் தகுதியன்றெனத் தான் எண்ணிய காரணங்களில் முதலில் ஒன்றை விவரிக்கின்றார். அதாவது அரக்கர் கடலில் வழி மறிப்பர்; அதனால் போர் தொடங்கும். தனிமையில் தடுமாற்ற மடைய நேரிடும் என்பதே யாகும். இந்தக் காரணம் போலி வாதமாகப் பிராட்டியார் கூறியதேயன்றி வேறல்ல. ஏனெனில் முதற்கண் "அரியதன்று நின் ஆற்றலுக்கென்னும் கருத்தினை இப்பிராட்டியே வெளியிட்டிருக்கிறார். அதற்கு மாறான எண்ணம் உடனே கொள்ள எவ்வித காரணமுமில்லை. என்றாலும் தனக்குள் நன்கு தெரிந்த ஒரு விஷயத்தினைக் கூடத் தெரியாதவர் போலப் பேசுதல் பெண்களின் நாற்குணங்களிலொன்று. இக்குணம் பெண்மையிடத்தில் இயல்பாக அமைந்தமை அவர்களை அணிகலன் போன்று அழகு செய்யவே யாகும். இதனை ஓதாதுணர்ந்த நமது மூதாட்டியாரும் 'பேதைமையென்பது மாதர்க்கணிகலம் எனக் குறிப்பாக உணர்த்தினர். இதனால் இன்னொரு செம்பொருளும் அதனுள் அமைந்து கிடக்கின்றது. அதாவது பேதைமையைப் பெண்களோடு பிறந்த அவயவம் என்று கூறாது அணிகலம் என்றமை தான். அவயவம் இடையில் உடலைவிட்டகற்ற முடியாது. அணிகலன்களோ வேண்டுங்கால் புனையவும் வேண்டாக்கால் விலக்கவும் கூடும். இன்றியமையாத தருணங்களில் பேதமைப் போர்வையைக் களைந்தெறிந்து மெய்யறிவுடைமையைக் காட்டிக்கொண்ட பேரறிவுடைய மாதரசிகளை நமது பண்டை நூல்களில் பரக்கக் காணலாம். அன்றியும் இப்பிராட்டியாரே பின் போர் காலத்தில்

> "பங்கயத் தொருவனும் விடையின் பாகனும்
> சங்குகைத் தாங்கிய தருமமூர்த்தியும்
> அங்கையின் நெல்லிபோல் அனைத்தும் நோக்கினும்
> மங்கையர் மனநிலையறியப் பாலரோ."

என மங்கையர் மனநிலையினை மும்மூர்த்திகளாகிற ஆக்கல் காத்தல் அழித்தலைச் செய்யும் கடவுளரும் உணரவல்லர் அல்லர் எனப் புகன்றிருக்கின்றார். இதனால் பெண்கள் உண்மையிற் பேதமையுடையவரு மல்லர் பேதமை தமக்குள்ள தென்னும் எண்ணம் உடையவர்களு மல்லர். பேதமை உடையவர்போலக் காட்டிக்கொள்ளும் ஓர்வித அடக்க வுணர்ச்சி கொண்டவர்களென்பதே உண்மை. ஆடவரிடமும் பேதமைக் குணம் உண்டாயினும் அது உண்மையில் அறியாமையையே கொண்டதாகும். உள்ளுக்குள் தெளிவும் வெளிக்கு அறியாமைத் தோற்றமும் பெண் பிறவிக்கே அமைந்த தொன்றாம். அதுபற்றியே பெண்மைப் பேதமையைப் பிராட்டியார் பேதமை என்றுரையாமல் பெரிய பேதமையென விசேடித்தருளினர். இதனால் பெண்களைப் பேதையர் எனவே மதித்து இரங்கும் ஆண்களும் பலர். இன்னார் உண்மை யுணரமாட்டாதவர்களென்பதே பெரிதும் பொருந்தும். இதனால் பெண்கள் எவர்க்குமே பேதமை இன்றெனவாவது அதனை சமயத்திற் கேற்

பப் பயன்படுத்த முடியு மென்றுவதுகொள்ளுதற்கில்லை. உத்தம விலக்கணம் அமைந்த பெண்களுக்கே இவை பொருந்தும். ஆடவரிலும் பெண்மைக் குரிய மேலேகண்ட அடக்க வுணர்ச்சி யமைந்த பலப் பலர் உளர். அவர்களும் விநயமுள்ளவராக மதிக்கப்படுகின்றனர். ஆயினும் இக்குணம் பெண்மைக்கு இயல்பாகவும் ஆண்மைக்குச் சிறப்பாகவும் கொள்ளத்தக்கதே. சமூக முன்னேற்றம் செய்வதாகக் கிளர்ச்சி செய்யும் சிலர் பெண்களே தங்களைப் பேதையர் என எண்ணி நீண்டகாலமாக உரிமை யிழந்திருப்பதாக எண்ணுகின்றனர். பெண்களிலும் நவீனக் கல்விகற்ற ஒரு சிலர் ஆடவர் கூறுவதைப் பின்பற்றி உரைக்க முன் வருகின்றனர். இது மிகவும் பரிதாபம். தன்னை அறிவிலியாக எண்ணும் இயற்கை சிற்றெறும்பு உள்பட எந்தச் சிறிய சீவர்களிடத்திலும் இருக்கமுடியாது. அறிவிற் குறைந்தவர்களும் தம்மைச் சிறப்பாகவே மதித்து வினை யாற்றுவது கண்கூடு. நீ அறிவிலி என்ற சொல்லை பிறர் சொல்ல நேரின் சிறுவரும் பொறுமை யிழக்கின்றனர். அங்ஙனமிருக்க நுண்ணறிவிற் சிறந்த பெண்கள் எவ்வாறு தம்மைப் பேதையர் என எண்ணிக்கொள்ளமுடியும். ஆதலின் அவ்வா றெண்ணுவோர் தாமே தம்மை ஏமாற்றிக்கொள்பவர்களே யாவர்.

இதற்கேற்ப ஈண்டு பிராட்டியாரே அடுத்த செய்யுளில் தனது ஆன்ற அறிவுடைமையைக் காட்டும் வேறு இரண்டு காரணங்களைக் கூறுகின்றார். அதாவது,

" அன்றியும் பிறிதுள்ளதொன் றுரியன்
வென்றிவெஞ் சிலைமாசுணும் வேறினி
நன்றி யென்பதம் வஞ்சித்த நாய்களின்
நின்ற வஞ்சனை நீயும் நினைத்தியோ?

வில்லாளரிற் றலைசிறந்த தாசரதியின் திருக்கரத்தில் தாங்கிய கோதண்டத்திற்கு இச் செய்கையினுல் பழியும் எய்துமே? அவரது கடமையை அவ்ரால் ஏவப்பட்ட நீ செய்வது அவருக்குக் கீர்த்தி யளிக்குமோ?

அன்றியும் அற்றநோக்கி அயலார் பொருளைக் கவ்வும் இழிதகை நாயைப் போல் இராகவனைப் பிரியச் சூழ்ச்சிசெய்து என்னைக் களவினுற் கொண்டு வந்த அவ்வரக்கனுடைய ஈனச் செய்கையை (சுத்த வீரனுகிய) நீயும் செய்யலாமென நினைக்கவும் தகுமோ? என்பது பொருள். இவ்விரண்டு காரணங்களும் பிராட்டியாரின் வீர வுணர்ச்சியைக் காட்டுகின்றன. இக்காரணங்கள் அநுமான் உள்ளத்தில் நன்கு பதியும் என்பதும் இவர் கருதிப் புகன்றிருத்தல் கூடும்.

இஃதோர்வகை உபாயமேயாம். இவ்விரண்டு காரணங்களையும் உலகை நோக்கிப் புகன்ற அன்னையார் அதன்மேலும் தொடர்ந்து தனது உள்ளக் கருத்தையும் படிப்படியாக விளக்குகின்றார். அதாவது இரகு வீரனது அம்பு

கள் பாதகனைப் போர்க்களத்திற் படுத்தபின் மண்ணும் விண்ணும் காண நான் மீட்கப்பட்டால்தான் என் கற்பும், உயர் குடிப் பிறப்பும், கொண்ட நாணமும் பயனுடையவைகளாகும். அவ்வாறின்றிக் களவினால் நான் தப்பி யுய்ய வழிகாணின் யான் இறந்துபட்டதற்கே சமானம் என்பதே யாகும்.

இவ்வளவும் கூறிய பிராட்டியார் அநுமானைப்பின்னும் திருப்தி செய் விக்க விரும்பினவராய் தூதுவ,

இந்த இலங்கை மட்டிலன்று இதனோடு கூடிய எல்லா உலகங்களையும் கூட எனது தெய்வக் கற்பினால் சாம்பராக்கியு மிருப்பேன். சூரிய குல திலக னது வில்லின் பெருமைக்குக் குறைவுண்டாகும் என்றே இவ்வளவையும் பொறுத்து அநுபவிக்கின்றேன் என்றனர். இதனால் அந்தோ தேவியார் ஓர் திக்கற்ற பேதைப்பெண் என இரங்கும் எண்ணம் கொள்ளவேண்டாம். என்னைக் காத்துக்கொள்ளவும் எதிரியை எரிக்கவும் என்னாலும் முடியும் எனது ஒப்பற்ற நாயகன் புகழுக்குப் பழுதுண்டாக நானே எதுவும் செய்தல் தகா தென்றே தாமதிப்ப தென்பதை உணர்வாயாக என்பதையும் தெளிவாக்கியது இம்மொழிகள்.

இவ்வளவும் கேட்டும் அநுமான் இவ்வினைத்தையும் போதிய சமாதான மாகக் கருதமாட்டானோ? என்கிற ஐயத்தின்பேரில் அநுமானால் மறுக்கமுடி யாததும் தன் மனத்தில் உள்ள உண்மையான காரணமும் ஆகிய சீரிய முடி வையும் செப்புகின்றார். அதனை,

> " வேறுமுண்டுரை கேளது மெய்ம்மையோய்
> ஏறுசேவகன் மேனிஅல்லால் இடை
> ஆறுமைம்பொறி நின்னையும் ஆணெனக்
> கூறும் இவ்வுருத் தீண்டுதல்கூடுமோ?

என்னும் கவியினால் ஒளிவின்றிக் குறிப்பிட்டார். இச் செய்யுளில் தனது கற்பின் உறுதியை அநுமானால் நன்கு தெளிவுறச் செய்ததோடு அவ்வண்ணம் தெளிவதிலும் அநுமனது தூய உள்ளமும் தாய்மை யன்பும் சிறிதும் தாக்கப் படுதல் கூடாதென்று சர்வ ஜாக்கிரதையுடன் "ஆறும் ஐம்பொறி நின்னையும் என வெகு மாதுரியமாகச் சிறப்பிக்கின்றார்.

இந்திரியங்களை அவித்த நின்னையும் என்று கூறினும் எங்கே வருந்த நேருமோ? என்று கருதினவர்போல ஆறும் ஐம்பொறி அவித்த ஐம்புலன் களை யுடையவனாகிய நின்னையும் என்று உம்மைத் தொகையும் தந்து ஒப்பற்ற பிரமசாரியெனச் சிறப்பித்துக் கூறுகின்றார். பெண்மைக் கியற்கையாகிய சொல்வன்மை ஈண்டு அரியாதனம் பெறுகின்றது.

ஆறும் ஐம்பொறி யெனில், இளமையிலிருந்தே இந்திரிய சேட்டைகளை அடக்கிய நைட்டிக பிரமசாரி என்று பொருள்படும். அவித்த ஐம்புலன்களை யுடையவன் எனில் இல்வாழ்வானாகி முன்னம் சின்னாள் இருந்தபின்னர் அவ் வெண்ணங்களை முயற்சியால் நீக்கியவன் என்பது பெறப்படும். அதுபற் றியே பிராட்டியார் ஆறும் ஐம்பொறி நின்னையும், என்று ஏற்றிப் போற்றி னார்.

அத்தகைய உத்தம ஒழுக்கமுடைய உன்னையும் பால்வேற்றுமையினால் ஆண் என்றே உலகம் கருதும் தன்மை யுண்டாதலின் அதற்கு மாறாகிய

பெண்யாற் பிறவிபெற்ற நான் பரிசித்தல் கூடுமோ? இதிலும் புதை பொருளாக மற்ளேர் நயம் அமைந்துகிடக்கின்றது. உள்ளம் நம்மிருவர்க்கும் தூயதே. அதையே காரணமாகக்கொண்டு உலகம் அங்கீகரிக்க முடியாத ஒரு செய்கையைச் செய்ய எண்ணுவதும் அறிவுடைமையாகாது. அறத்தாறுமாகாது. ஆன்ஞேர் காட்டிய நல்லொழுக்கமே அறத்தாறென்று பெறப்படும். எனும் இத்தகு செம்மைக் கருத்தும் அக்கவியுள் மிளிர்கின்றது. இதுவுமன்றி இவ்வுருத் தீண்டுதல் கூடுமோ? என்றது உணர்வினல் எனக்கும் உன்பால் பரம பவித்திரமான சேயன்பு தலைசிறந்துளது. உணர்வினல் பரிசிக்கலாம். மாசற்ற நீயும் அவ்வாறே அன்பு பூணலாம். எனினும் ஆண் என்றும் பெண் என்றும் மாறுபட்ட பிறவிகளின் காரணமாக உலகியலை நோக்கி இவ் வுருத் தீண்டுதல் ஒவ்வாததே. அடாத செய்கையுமாகும். என மெய்ம்மைக் கற்பின் நிரந்தரச் சட்டத்தினை நிலைநாட்டுகின்ருர். ஆடவர் திலகஞகிய அண்ணலின் திருமேனி ஒன்றே என்னல் பரிசிக்கத்தக்கதாகும் என்னும் உண்மை நிலையை மனக்கதவந் திறந்து வெளியிட்டனர். இவைகளால்,

> " சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல் அச்சொல்லை
> வெல்லும் சொல் இன்மை யறிந்து"

என்றும்,

> " உலகத்தோடொட்ட ஒழுகாதான்மன்ற
> பலகற்றும் கல்லாதவன்"

எனவும் வரும் தெய்வத் திருக்குறள்கள் மணம் கமழ்கின்றன என்றல் மிகையாகாது.

இனி இவ்வளவும் கூறிய அன்னையார் விவேகியாகிய அநுமானுக்கு இத்தகைய கட்டுப்பாடான மறுப்புரை வழங்கும் இவர் இராவணன் கொண்டு போந்தக்கால் என் செய்தார் என மனதிலாவது ஐயுறுதல் கூடுமென ஊகித்தவராய், ஐயனே அரக்கனும் என்னைத் தீண்டின் தனதாருயிர் தப்பாதென்றஞ்சியே யானிருந்த தழைக் குடிலுடன் நிலத்தை தன் தேக பலத்தினல் கீண்டு அகழ்ந்து தேரில் ஏற்றிக்கொண்டு இங்கடைவித்தான். அவ்வாறவன் செய்தகாரணம் முன்னல் இவன் பிரமதேவனல் உடன்பாடில்லாத மாதரைத் தீண்டினல் தலைவெடித் திறக்கும்படியான சாபம்பெற்ற துண்டென்னும் உண்மை விவரம் பின்னர் விபீஷணன் புத்திரியால் நான் அறியலானேன். அந்தச் சாபத்தினல் என்னைத் தொடத் துணியான் என்னும் திடமான நம்பிக்கை எனக்குண்டு. பதிதன் பலாத்காரமாக யாது தீங்கிழைப்பனே? என்கிற பயம் உனது உள்ளத்திலும் இருப்பது கூடும். ஆதலின் இவ்விரகசியத்தினை யுரைக்கின்றேன். நீயும் அச்சந் தவிர்த்தி என்றும் அறிவுறுத்தி மேலும் பலகூறி,

> " ஆதலானது காரியம் அன்றைய
> வேதநாயகன் பாவினிமீண்டனை
> போதல் காரியமென்றனள்" பூவை

(தொடரும்)

# சிறுகதை

## தாரா சசாங்கம்.



S. V. G.

[இது சென்ற ஆண்டு வெளியான "சிருங்கார கண்டாபரணமு" என்னும் தெலுங்கு நூலினின்று தமிழ்ப் படுத்தப்பட்டது.]

1

"ஆஹா, எவ்வளவு மதியீனனாய் விட்டேன்! இந்த துர்மார்க்கனை வீட்டுக்குள் சேர்த்துக்கொண்டதா லல்லவா எனக்கித்தகைய கஷ்டம் நேர்ந்தது? எவ்வளவுதான் துக்கப்பட்டாலும் இப்பொழுது என்ன லாபம்? விதியை வெல்ல யாரால் இயலும்? இத்தகைய சந்தர்ப்பங்களில், பார்த்தும் பாராததுபோல் இருந்துவிட வேண்டுமே யன்றி, வியவகாரத்தில் தலையிட்டுக் கொண்டால், சந்தி சிரிக்க நடுவீதியில் நிற்க வேண்டியதுதான். விதி, விதி"

என்று தலையில் கையை வைத்துக்கொண்டு விசார ஹ்ருதயத்துடன் ராமராவ் தனது பங்களாவில் ஒரு சோபாவின்மேல் படுத்துக்கொண்டு பெருமூச்சுவிட்டுக் கொண்டிருந்தார். அவருக்கு இத்தகைய கஷ்டம் விளைவித்ததெது வென்றறிய விரும்பும் வாசகர்கள் கீழ்வரும் விருத்தாந்தங்களைப் பொறுமையுடன் படிப்பார்களாக.




சுந்தரம்மாள் தனது பெயருக்கேற்ற சுந்தரமுடைய வனிதையே. நீண்ட விசாலமான கண்கள், சந்திரனைப் பழிக்கும் முகம், பத்தரை மாற்றுத் தங்கமெனத் திகழும் நிறம், நீண்டகருங்குழல். அவளது எழிலும், மதுரமான மொழியும் எவரையும் மயக்குவன. பதினாறு வயதே நிறைந்த அம்மடந்தை, ராமராவ் தனது ஆபீஸிலிருந்து அலுத்து, சோர்ந்து வருங்காலத்து, புன்முறுவலுடன் அவரை வரவேற்று, தனது இனிய சொற்களால் மகிழ்வித்து, உபசரிக்கும்பொழுது,

சிறுது வயது முதிர்ந்த அவளது கணவனுக்கு அது ஒரு பேரின்பமா யிருக்கும். அப்பொழுதே அவர் தனது ஆயாசமெல்லாம் மறந்து அவளுக்குத் தாஸானுதாஸனாய் விடுவார்.

ராமாராவ் ஹைகோர்ட்டில் ஒரு குமாஸ்தா. சுமார் நாற்பது வயதிருக்கும். பாவம், இதுவரையில் இரண்டு மனைவியர் கால மடைந்தமையால், சுந்தரம்மாளை அவர் தன் கண்மணியாகக் காதலித்து வந்தார். தனது உயிரைக் கொடுத்தாகிலும் சுந்தரம்மாள் வேண்டியதை யெல்லாம் வாங்கிக் கொடுக்கச் சித்தமா யிருப்பார். ஆனாலும், சுந்தரம்மாள் அவரை எதிர்த்துப் பேசுவதாவது, அவசியமற்ற வஸ்துக்களை வாங்கவேண்டுமென்று சொல்வதாவது, கிஞ்சிற்றேனும் இல்லை.

ராமராவுக்கு மாதம் 80-ரூபாய் சம்பளம். அஃதன்றி வருஷம் சுமார் இரண்டாயிரம் ரூபாய் வாத்தக்க பூஸ்திதியும் உண்டு. அதனால் சென்னையில் சுகவாசம் செய்ய அனுகூல மேற்பட்டது. சுற்றிலும் ஒரு சிறு தோட்டம், நடுவில் அழகிய சிறுவீடு. ஒரு வேலைக்காரி. இவற்றுடன் அத்தம்பதிகள் நித்யானந்தம் அநுபவித்து வந்தனர். அவருடைய உத்தேசம் என்ன? ஒரு நாள் சுந்தரம்மாள் ஒருசிறு குழந்தையைத் தொட்டிலில் கிடத்தி, தாலாட்டுப் பாடிக்கொண்டிருக்க, தான் ஒரு ஈஸிசேரில் சாய்ந்துகொண்டு அதைக் கண்டு ஆநந்திக்கவேண்டு மென்பதுதான். ஆனால் பகவான் மட்டும் இன்றும் அவரது கோரிக்கையை நிறைவேற்றி வைக்கவில்லை.

2

மனோகர ராவ் தாய் தந்தையர் நெல்லூர் வாசிகள் ராமராவுக்குத் தூர பந்து. மனோஹரம் தந்தை ராமராவை வேண்டிக்கொண்டு, அவன் சென்னையில் படிக்கும் வரையில் அவரது வீட்டிலேயே போஜனம் செய்து வருமாறு ஏற்பாடு செயதிருந்தார். ராமராவும் அதற்கு இணங்கி மனோகரனைத் தமது மகனைப்போல் நேசித்துப் போற்றி வந்தார்.

மனோஹரனுக்கு 19-வயது. சிறிது மாநிறமானாலும், பார்ப்போர் கண்ணைக்கவரும் வனப்பு வாய்ந்தவன். சுருட்டைமயிர் கிராப்பும், இளமீசையும் அவனது எழிலை மிகுதிப்படுத்தின. படிப்பில் அவ்வளவு விற்பன்னனல்லாவிடினும் ஏதோ சாதாரணமான அறிவுள்ளவன். இப்பொழுது ஜூனியர் பீ. ஏ. வகுப்பில் பயின்று கொண்டிருந்தான்.

சாதாரணமாக, தானுண்டு தனது படிப்புண்டு என்று இருப்பானே தவிர பிறருடைய விஷயங்களில் தலையிட மாட்டான். காலையில் எழுந்ததும் சுந்தரம்மாள் தயார் செய்த வெந்நீரில் குளிப்பான். பிறகு, தனது அறையில் சிறிதுநேரம் படித்துவிட்டு, ராமராவுடன் சாப்பிட்டு விட்டுப் பிறகு பள்ளிக்கூடத்துக்குப் போவான். மத்தியானம் ஒவ்வொரு நாளைக்கு மிகவும் பசியானபொழுது காபி ஹோட்டலுக்குப்போய் ஏதேனும் பலஹாரம் சாப்பிடுவான். ஆனால், அவனுடைய தந்தையார் அவனுக்கு அனுப்புவது மிகவும் சிறியதொகை யானதால், சில நாட்களில் கையில் காசில்லாததால் ஒன்றும் சாப்பிடாமல் இருந்து விடுவான். சாயந்திரம், வாடினமுகத்துடன் வீட்டுக்கு வருவதைக்கண்ட சுந்தரம்மாள், தான் தனது கணவருக்காக மத்தியானம் செய்த பலஹாரத்தை அன்புடன் கொடுப்பாள். அதை உண்டு மனோஹரம் சிறிது களை தீர்த்துக் கொள்வான்: அப்பொழுது சுந்தரம் "ஏனப்பா, மனீ, தினமும் காபி ஹோட்டலுக்குப் பணத்தைக் கொட்டா

விட்டால், ஏதோ எங்கள் வீட்டில் இருப்பது கொஞ்சம் தின்றால் தப்பா? நான் செய்வது உனக்குப் பிடிக்கவில்லை போலிருக்கிறது?" என்பாள். அதனால், மனோஹரனுக்கு இவள் முகத்தைக்கண்டால், சிறிது பயமும் சிறிது வெட்கமும் உண்டாகும். சாயங்காலத்தில், அவன் மற்ற பிள்ளைகளைப்போல விளையாடுவதற்கோ, பீச்சுக்கோ, போகாமல் நேராக வீட்டுக்கு வந்து ஒரு கதையையோ, பாட்டையோ படித்துக் கொண்டிருப்பான். அவனுக்குத் தன் தாய்பாஷையிடத்து அத்யந்தப் பிரியம் உள்ளது மன்றி, சிறிது சங்கீத ஞானமும் உடையவனுதலால், தெலுங்குப் பத்தியங்களை மாலை வேளையில், மரத்தடியில் உட்கார்ந்து தனது இனியகுரலில் படிப்பான். கேட்பதற்குப் பரமானந்தமா யிருக்கும்.

3

மாலை வேளையில், புஷ்பங்களின் நறுமணத்துடன் தென்றல் இனிமையாக வீசிக்கொண்டிருந்தது. சில குயில்களின் 'குஹூ" த்வனியும் கேட்போரைப் பரவசப் படுத்தியது. மனோஹரம் எப்பொழுதும்போல மாமரத்தடியில் சாய்ந்துகொண்டு தனது இளமேனியின் களைப்பை ஆற்றிக்கொண்டிருந்தான். அவன் கையில் சேஷம் வெங்கட கவிகள் எழுதிய "தாரா சசாங்கம்" இருந்தது. காகிதங்களை அப்படி யிப்படித் திருப்பிக்கொண்டு, தனது இனிய குரலில் ராகம் ஆலாபனை செய்துகொண்டு, அழகிய தனக்குப் பிடித்த பாடல்களைப் பாடிக்கொண்டும் இருந்தான். மூன்றுவது அங்கம் வந்தது. யுவகர்களுக்கு இதுவே மனதுக்குகந்த இடம். கவி காதலைப்பற்றி அமோகமாக வர்ணிக்கும் இடம் இதுவே. காதலர் காண்பதும், குறிப்பு தோற்றுவிப்பதும், முயங்குதலுறுவதும் முதலாய செய்திகள் நிகழ்வதெல்லாம் மூன்றுவதங்கத்தேயே.

4

சாதாரணமாக, ராமராவ் ஆபீஸ் வேலை முடிந்ததும், தனது நண்பருடன் சிறிதுநேரம் பொழுது போக்கிவிட்டு, பீச்சில் சிறிது சங்கீதம் அனுபவித்துவிட்டு இரவு எழரை மணிக்கே வீடு சேருவது வழக்கம். அன்று வெள்ளிக்கிழமை யாதலால் கோவிலுக்குப்போய் அம்மனைத் தரிசித்துவிட்டு எட்டு மணிக்கே வருவார். அவர் வரும்பொழுது சுந்தரம்மாள் சமையல் யாவும் தயார் செய்திருப்பாள். மனோஹரம்கூட ராமராவ் வரும்வரையில் சாப்பிடுவது கிடையாது. ஏதோ படித்துக்கொண்டிருப்பான்.




இன்று சுந்தரம் ஐந்து மணிக்கே சமையல் வேலை முடித்துவிட்டு,முகங்கழுவி, பொட் டிட்டு, ஜடை போட்டு, அதில் ஒரு ரோஜா புஷ்பம் வைத்துக் கொண்டு, ஒருவித நூதன அழகுடன் தோட்டத்துப்பக்கம்

வழக்கமாகச் செல்வதுபோல் சென்றாள். மனோஹரம் வழக்கம்போல் மாமரத் தடியில் படுத்துக்கொண்டு தாரா சசாங்கத்தில் பாட்டுகள் பாடிப் பரவச மடைந்துகொண்டிருந்தான். வேறுபக்கம் பார்த்துப் படுத்துக்கொண்டிருந் தமையால் சுந்தரம்மாளை அவன் கவனிக்கவில்லை. தான் வருவது தெரிந்தால், வெட்கப்பட்டு பாட்டு பாடுவதை நிறுத்தி விடுவானோ என்று அஞ்சிய சுந்த ரம் சப்தம் செய்யாது அவன் பின்புறம் வந்து நின்றாள்.

அப்பொழுது, அவன் சசாங்கன் (சந்திரன்) உத்யான வனத்தி லிருந்த பொழுது தாரை (பிருஹஸ்பதியின் மனைவி) அவனிருக்கு மிடத்துக்குவர, சந்திரன் தனது குருவின் மனைவியை நோக்கிச் சொன்ன, "நீ இப்பொழுது இங்கு ஏன் வந்தாய்? உனக்கு வீட்டில் வேலையில்லையா? இது தகாது. போ, போ" என்ற கருத்துடைய, பத்தியத்தைப் படித்துக்கொண்டிருந்தான். தன்னை யறியாமல், அவன் வாயிலிருந்து மனோகரமாய்ப் புறப்பட்ட இம் மொழிகளைக்கேட்ட சுந்தரத்தின் மனோநிலை எப்படி யிருக்குமென்று, வாச கர்களே, நீங்களே யூகியுங்கள். அவள் "மனா, கவித்வம்கூடக் கற்றுக்கொண் டாய் போலிருக்கிறதே. ஏதோ, அந்தப்பாட்டை முடி, பார்ப்போம்" என்றாள்.

மனா திடுக்கிட்டான். திகைத்துவிட்டான். சிறிதுபோது இருவரும் வாய்திறக்கவில்லை. பிறகு, சுந்தரம் "சொல்லு, மனா. இல்லை, இல்லை. மைத் துனரே, தயவு செய்து பாடுங்கள். தங்கள் கவித்வத்தைக் கேட்டு ஆனந்திக் கவே கேட்கிறேன். வேறொன்றுமில்லை" என்றாள்.

மனோ:—"என் பவிஷுக்குக் கவித்வம் கூடவா. ஏதோ புஸ்தகத்தி லிருப்பதையே தாறுமாறாய் உளறுகிறேன்."

சுந்தரம்:—'போதும், போதும். எனக்கும் வேறு வேலை யிருக்கிறது. நான் வராமலிருக்கும்பொழுதுதான் உன் சங்கீத ஞானம் பரவும்போ லிருக் கிறது. நான் சொன்னால் நீ பாடுவாயா? நான் வருகிறபொழுது நீ 'ஏன் இங்கு வந்தாய்? உனக்கு வீட்டில் வேலையில்லையா?' என்று கூட்டிப் பாடுவது எனக்குத் தெரியாதா? இம்மாதிரி கவி பாடுவதெல்லாம் எப்பொழுது கற்றுக் கொண்டாய்?'

மனோ:—'எவ்வளவு சமத்காரம், அம்மா? இந்தக் கதையில், சந்திரன் வனத்தில் இருக்கும்பொழுது தன்னிடத்து வந்த தாரையை அப்படிக் கேட் டான். அதுதான் படித்தேன். அவ்வளவுதான்.'

"அது கூடவா? அவனும் உன்னைப்போலவே வனத்தில் இருந்தானா?"

"ஆம், அப்படித்தான் இருந்தான்."

"சரிதான், அந்தக் கதை என்னமோ முதலிலிருந்து சொல்லு?"

"ஒன்றுமில்லை. அது ஒரு சிருங்கார கதை."

"ரொம்ப நல்லது. சிருங்காரம் என்றால் எனக்கு மிஷ்டம் தான்" என்று சொல்லி அவன் பக்கத்தில் அமர்ந்தாள்."

"ஆனால் அந்தக் கதையைப் பெண்கள் கேட்கத்தகாது எனச் சிலர் சொல்லுகிறார்கள். அதனால்தான்............"

"ஆண் பிள்ளைகள் படிக்கக்கூடாதென்று ஒருவரும் சொல்லவில்லையா?"

"பின், ஒருவரும் படிக்காவிட்டால் புஸ்தகம் யாருக்காக?"

"ஆமா. நீங்கள் படிக்கிறதற்கும், நாங்கள் கேட்பதற்குந்தான் புஸ்தகம். இனி சொல்ல மாட்டாயா? எனக்கு நேரமாகிறது."

"அடடா, உங்களுக்கு ரொம்ப பிடிவாதம், சரி கேளுங்கள். சொல்கிறேன். சொல்லவா?"

"இரு. இரு. நல்ல நேரமா என்று பார்த்துவிட்டு வருகிறேன்."

"சரி, சரி, கேளுங்கள். பின்னே சந்திரன் பிரஹஸ்பதி வீட்டுக்குப் படிக்கப்போனான்."

"சரி. நீ ரஸிகனே. இந்தக் கதையை உன் அண்ணா முன்னமே சொல்லியிருக்கிறார். இதில் தாரைகூட வருகிறாளல்லவா?"

"ஆமாம்; வருகிறாள்."

"முன்னொருநாள், சந்திரகிரஹணத்தன்று, பாவம், சந்திரனுக்கு இவ்வளவு கஷ்டம் சம்பவித்ததென்றேன். அப்பொழுது, உன் அண்ணா, சந்திரன் மகா பாபம் செய்தானென்றும், குருத்துரோக மென்றும் சொன்னார். எனக்குத் தெரியும். அப்பொழுது, தாரைகூட என்னைப் போலவே வனத்துக்குள் வந்தாளல்லவா?"

"உங்களைப்போல வருவதென்ன? தாரை கெட்டவள். கெட்ட எண்ணத்தோடு வந்தாள்."

"இருக்கலாம். எண்ணத்தைப்பற்றி நான் சொல்லவில்லை. வனத்துக்குள் வந்ததைப்பற்றித்தான் கேட்டேன்."

"ஆம்."

"நீயும் சந்திரனைப்போல் வனத்திலிருக்கிறாய் அல்லவா."

"அந்த மஹாத்மனுக்கும் எனக்கும் என்ன உபமானம்?"

"ஆ! அவன் மகாத்மியம் என்ன கிழிந்தது? அப்படிப்பட்ட மகாத்மியம் உன்னிடம் இல்லையா?"




"அவர்கள் தேவதைகள். நாம் மனிதர். எனக்கு மகாத்மியம் எப்படி வரும்."

"போதும், உன் மகாத்மியம்."

இவ்வாறு சொல்லி, அவள் மனோஹரனுடைய மிருதுவான கன்னத்தில் மெல்ல அடித்தாள். ஏனோ அவன் உடல் முழுதும் புளகாங்கித முற்றது. புன்முறுவல் செய்து சும்மாயிருந்தான்.

"அதென்ன, அப்படி நடுங்குகிறாயே இதற்கெல்லாம்" என்றாள் சுந்தரம்.

மனோஹரத்துக்கு வாயெழவில்லை. சிறிது நேரம் சுந்தரமும் ஒன்றும் சொல்லவில்லை. பிறகு, தன் அழகிய கைகளால் அவன் புஜத்தைத் தொட்டு இனிய குரலில் "மனு"

என்றாள். திடுக்கிட்டு விழித்தான் மனூ. சுந்தரம் பேசவில்லை: தோளிலிருந்த கையையும் எடுக்கவில்லை. பதுமைகள் போல் ஒருவரை யொருவர் இமை கொட்டாமல் பார்த்துக்கொண்டு இருந்தார்கள்.

மறுபடியும், "மனூ" என்றாள் சுந்தரம்.

"ஏனம்மா, என்றான் மனோஹரம்.

"நாமிருவரும் இங்கே தாரையையும் சந்திரனையும் போலவே இருக்கிறோமல்லவா" என்றாள் சுந்தரம் மலர்ந்த புன்னகையுடன். அவளது எண்ணங்கள் என்னவோ அவளுக்கே தோன்றவில்லை.

மனோஹரம் ஒன்றும் பதில் சொல்லவில்லை, சுந்தரம் எழுந்து நின்றாள். மனோஹரமும் எழுந்தான். இப்பொழுது அவளுக்கு நேராக எதிரில் நின்று தனது இரண்டு கைகளாலும், அவளது அழகிய ஹஸ்தங்களைப் பற்றினான்.

"எனக்கு வேண்டியது அவ்வளவே" என்றாள் சுந்தரம்.

"என்ன அது" என்றான் மனூ.

"நீ என் கையைப் பிடிக்கிறாய்—அதே"

"அப்படியானால் விட்டுவிடுகிறேன்" என்று அவள் கைகளை விட்டுவிட்டான்.

இதற்குள் வீதியில் கதவை யாரோ தட்டுவது கேட்டது. திடுக்கிட்டார்கள். சுற்றிலும் இருள் சூழ்ந்ததை அப்பொழுதே உணர்ந்தார்கள்.

5

தன்னோடு சாப்பிடும்போது கேலி பண்ணுதல், இனிமையாகப் பேசுதல், முதலியான ஒன்றும் இன்று காணாததுபற்றி ராமராவ், ஒருவேளை தன்மேல் சுந்தரத்துக்கு கோபமோ என்று நினைத்தார். அவள் ஹ்ருதயத்தில் கொழுந்து விட்டெரியும் தணிக்க இயலாத பெருந்தீயைப்பற்றி, பாவம், அவர் என்ன அறிவார்?

இனி, மனோகரனைப்பற்றிச் சொல்லத் தேவையில்லை. பாவம், உலகியலறியாத யௌவன புருஷன் மனதை சாயங்காலம் நடந்த நாடகம் முற்றிலும் கலைத்துவிட்டது. அப்பொழுது, அந்த தாரா சசாங்க நாடகம் முழுதும் அவன் நினைவுக்கு வந்தது. "சீ, சீ, சுந்தரம்மாள் மிகவும் நல்லவளாயிற்றே. என்ன குறைவென்று இத்தகைய கெட்ட புத்தி வந்தது. ஏதோ, வெறுந் தமாஷுக்காகச் செய்தாள்" என்று தன்னைத் தானே ஒருவாறு தேற்றிக் கொண்டு புஸ்தகம் எடுத்தான். படிப்பாவது வரவாவது, ஒன்றும் சரியாக விளங்கவில்லை. இதென்ன கஷ்டம் என்று படுத்துக்கொண்டான். தூக்கமும் வரவில்லை. ஆயிரம் கனவுகள். ஒவ்வொன்றிலும் தானும் சுந்தரமும் காதலன் காதலியே.

6

மறுநாள் சனிக்கிழமை. பள்ளிக்கூடம் லீவ். கச்சேரி யிருந்தபடியால் ராமராவ் வழக்கம்போல் புசித்துவிட்டுக் கச்சேரிக்குப் போய்விட்டார்.

மனோஹரமும் சாப்பிட்டுவிட்டுத் தனது அறையில் கையில் ஒரு புஸ்தகத்தை வைத்துக் கொண்டு விரித்த படுக்கையில் படுத்து ஏதோ யோசித்துக் கொண்டிருந்தான். என்ன யோசனை நேற்று தனக்கும் சுந்தரத்துக்கும் நடந்த செயல்களை நினைத்துக்கொண்டு அவளது ஒவ்வொரு செயலுக்கும்

ஒரு புதிய காரணம் தோற்றுவித்து தன்னையே சமாதானம் செய்துகொண்டிருந்தான். ஆதியந்தம் ஒன்றும் தெரியவில்லை. எல்லாம் ஒரே கலக்கம்.

சிறிது நேரம் ஆயிற்று. சுந்தரம் ஏதோ சிறிது நேரம் கழித்து மெல்ல வந்தாள். கதவுக்கு வெளியில் நின்று சிறிது ஆலோசித்தாள். தலையை மூன்று தடவை ஆட்டினாள். மெள்ள எட்டிப்பார்த்தாள். கையிலிருந்த புஸ்தகத்தால் முகத்தை மூடிக்கொண்டு ஏதோ தன்னை மறந்தவனாய் மனோஹரம் படுக்கையில் படுத்திருந்தான்.

சுந்தரம் மெல்ல உள்ளே வந்தாள். என்ன சப்தம் செய்ய எண்ணாவிடினும், அவளது கால் கொலுசுகள் 'கல்'லென்றதைக் கேட்ட மனோஹரம் துள்ளி விழுந்து எழுந்து நின்றான்.

"ஏன் அப்படிப் பயப்பட்டாய்" என்றாள் அவள்.

"ஒன்றுமில்லை. மெய்ம் மறந்திருந்ததால் எவரோ என்றிருந்தேன்" என்று அவன் முறுவலுடன் சொன்னான்.

"யார் மேலே உங்களுக்கு அவ்வளவு காதல், மெய்ம்மறந்து போவதற்கு; என்று சுந்தரம் பகடியாகக் கேட்டாள்.

"அப்ப, மெய்ம்மறத்தலென்றால் சின்னத்தூக்கமே தவிர வேறொன்றுமில்லை"

"அப்படியா. எந்த நிகண்டிலது. அப்படியானால் பெரிய தூக்கத்திற்கென்ன சொல்வது"

"போதும். உங்களுக்குப் புண்யமாகட்டும். சும்மாயிருங்கள்"

"இவ்வளவு தூரம் வந்த பின் சும்மா யிருப்பதென்ன? இனி சும்மா யிருந்தால் பாவமேயன்றிப் புண்யமல்ல".

"என்னமோ? நீங்கள் சொல்வது எனக்கு ஒன்றும் அர்த்தமாகவில்லை."




"சரிதான், சொல்லுகிறேன் உட்கார்." மனோஹரம் உட்கார்ந்தான். சுந்தரம் அவன் பக்கத்திலேயே உட்கார்ந்தாள். சிறிது நேரம் பேசாமலிருந்து அவன் மோவாயைப் பிடித்துத் தடவிக்கொண்டு, "மனா, தாரா சசாங்க மென்னவென்று சொல்லமாட்டாயா" என்றாள்.

"உங்களுக்குத்தான் தெரியுமே, நான் எதற்காகச் சொல்லவேண்டும்".

"தெரிந்ததால் தான் கேட்கிறேன்"

"தெரிந்தவர்களுக்கு நான் என் சொல்லவேண்டும்"

"என்னவா? தாரைக்குச் சந்திரன் என்ன சொன்னானோ அது தான்..."

அவளது மற்றகை மனோஹரனைத் தழுவியது.

"என்ன சொன்னாலே எனக்கு எப்படித் தெரியும்"

"தெரியாதென்றால், யார் உன்னை விடுகிறார்கள்?"

"விடாமல் என்ன செய்யப்போகிறீர்கள்."

"விடாமல் என்ன செய்கிறேனோ பார்."

என்று சொல்லித் தனது நீண்ட கூந்தல் முடியவிழ்ந்து விழ தேகமெல்லாம் வியர்க்க, அவனைப் பிடித்து இறுகத் தழுவினாள். வான சாஸ்திரத்தில் பித்துப் பிடித்தவனைப் போல் ஆகாசத்தைப் பார்த்துக்கொண்டு, "ஆஹா" என்று அலறினான் மனோஹரம்.

"மனா! நான் சொல்வதைக் கவனமாகக் கேள். என் சங்கதியெல்லாமுனக்குத் தெரியும். நான் என் கிழப் புருஷனோடு படும்பாடு நீயே பார்த்துக்கொண்டிருக்கிறாய். எப்பொழுது அவர் தாராசசாங்கக் கதையை எனக்குச் சொன்னாரோ அப்பொழுதே தேவர்களே அப்படி செய்தால் நரர்களாகிய நமக்கு அது தப்பு அல்ல என்று தெளிந்தேன். அல்லாமல், பாவ புண்யங்களெல்லாம் பூர்த்தியாக ஆலோசித்தேன். சந்திரனையும் சம்பாதித்து விட்டேன். இனி, நீயும் அவனைப்போல பாவபுண்யங்களைப் பற்றி எனக்கு உபதேசம் செய்யப்போகிறாயா? கேள், இனி அது பிரயோஜனமில்லை. வீட்டு குட்டு வெளிப்படுத்துவதால் என்ன உபயோகம்?




அவளது மெல்லிய உடை நெகிழ்ந்தது. அவனது கரங்களைப் பிடித்துத் தனது மார்பகத்தில் சேர்த்து அடங்காத ஆசை வெள்ளம் தலைக்கேற அவனுடைய அழகிய இதழ்களில் முத்தமிட்டாள்.

பெரிய அறிவாளியும், குரு பக்தியில் ஈடுபட்டவனுமாதலால் சந்திரன் பற்பல நீதி வாக்கியங்களைத் தாரைக்குச் சொன்னாயினும் கடைசியில் இளக நேரிட்டது. இந்த பூலோக சந்திரனுக்கு அதுவும் முடியவில்லை. தான் சொல்லவேண்டிய தவ்வளவும் இது வரையில் சொல்லிவிட்டதாக மனோஹரம் எண்ணிக்கொண்டான். ஆகவே, இனி காதலிப்பதே தனது கருமமெனக்கொண்டான்.

.......................

இனி, என்ன கூறவேண்டியதிருக்கிறது. ராமராவ் தலையில் கையை வைத்துக்கொண்டு திண்ணையில் வாடின முகத்துடன் சோபாமேல் உட்கார்ந்திருந்ததன் காரணம் தெரிந்துவிட்டதல்லவா?



# பெட்டகக் கதைகள்.

("செம்பியன்".)

3. "மங்கையர் சொல்லினில் மூவருமுன்னமோர்
மாமுனி மங்கை யிடத்தினிலே
தொங்கினர் தொட்டிலிலே யெனும் வார்த்தையைச்
சொல்ல அறியாயோ பெட்டகமே."

என்பதில் அடங்கிய மூவர் கதையாவது:—

'அநசூயை' என்பவள் மகாபதிவிரதை; மேனை, சாவித்திரி, அருந்ததி, அநசூயை, சுநீதி என்னும் மகாபதிவிரதைகளில் ஒருத்தி: தக்ஷனுடைய புத்திரி; அத்திரி மகாரிஷியின் மனைவி. இவள் கற்பின் மகிமையால் அநேகம் அற்புதங்களை யெல்லாம் செய்தவள்; ஒரு காலத்தில் பிரதிஷ்டானபுரத்து வேதியனாகிய கௌசிகன் மனைவி இட்ட சாபத்தால் பொழுது விடியாதிருக்க, தேவர்களின் வேண்டுதலால் அவளிடம் சென்று வேண்டிப் பொழுது விடியச் செய்து தன் கற்பின் மகிமையை விளக்கினாள். ஒருகாலத்தில், இந்த அநசூயையின் கற்பின் மகிமை அறியும் பொருட்டு நாரதர் இவ்வுத்தமியிடம் சென்று ஆடையின்றித் தமக்கு அன்னம் பரிமாறும்படி கேட்டார். பெரியோர் விருப்பப்படி அன்னம் படைக்க வேண்டியது பதிவிரதைகளின் கடமையாதலால் அவள் அவ்வாறே உணவு பரிமாற இசைந்து, தன் கணவராகிய அத்திரிமகாரிஷியின் கமண்டலநீரை அந்த நாரதர் மீது தெளித்தாள். அவளுடைய கற்பின் மகிமையால் நாரதர் ஒரு பெண்ணாக மாறிவிட்டார். அப்பால் அநசூயை அவர் கேட்டவாறு ஆடையின்றி அவருக்கு அன்னம் படைத்தாள். நாரதர் பெண்வடிவத்துடன் வெட்கமடைந்து, பிரமா, விஷ்ணு, ருத்திரன் ஆகிய மும்மூர்த்திகளிடத்திலும் சென்று, "திரிமூர்த்திகளே! நான் அநசூயா தேவியிடம் சென்று அவளுடைய கற்பைச் சோதிக்க முயன்றதால் இந்தப் பெண்வடிவம் பெற்றேன்; இவ்வடிவத்துடன் வெளியே திரிய எனக்கு மிகுந்த வெட்கமா யிருக்கிறது; ஆதலால், இவ்வுருவத்தை நீங்கள் போக்கி யருள வேண்டும்" என்று வேண்டினர். அவர்கள், "இது மகாபதிவிரதையால் சேர்ந்ததாதலின் இதனைப் போக்குதல் எங்களால் முடியாது; அவளாலேயே இது நீங்கவேண்டும்; நீர் அவளிடமே சென்று இதைப் போக்குமாறு வேண்டிக் கொள்ளும்" என்று கூறினார்கள். நாரதர் அவ்வாறே திரும்பிப்போய் அநசூயையிடம், "கற்பரசியே! உன் மகிமை தெரியாமல் நான் உன்னைப் பரிசோதிக்க முயன்று பெண்ணாய் விட்டேன்; நான் செய்த குற்றத்தை மன்னித்து நீ இவ்வடிவினைப் போக்கி யருளவேண்டும்" என்று கேட்டுக்கொண்டார். அவள் மனமிரங்கி அப்பெண்வடிவத்தை

நீக்கினாள். பிறகு நாரதர் கர்வமொடுங்கி, அவளைப் பலவாறு கொண்டாடிச் சென்றார்.

ஒரு காலத்தில் இலக்குமி, பார்வதி, சரஸ்வதி ஆகிய மூவரும் தங்களுக்கு மேற்பட்ட பெண்கள் உலகத்தில் இல்லையென்று கர்வங் கொண்டிருந்தார்கள். மகாவிஷ்ணு அவர்களின் கர்வமொடுங்கவும் அநசூயையின் கற்பு விளங்கவும் செய்யக் கருதி இருப்புக் கடலையை அம்மூவரிடத்தும் கொடுத்து, "இதனை நான் உண்ணும்படி பாகஞ் செய்து கொடுங்கள்" என்று சொன்னார். அவர்கள் அதனை உணவாக்கித் தர முடியாமல் விழித்தார்கள். பின்னர் அவர்களுக்கு முன்னிலையில் அந்த இரும்புக் கடலையை அனுசூயையிடம் கொடுத்து உணவு சமைத்துத் தரும்படி வேண்டினார். அந்தப்பதிவிரதா சிரோமணி அதனை வாங்கி அவருடைய விருப்பப்படியே உணவு சமைத்து அவருக் களித்தனள். பார்வதி, இலக்குமி, சரஸ்வதி ஆகிய மூவரும் தங்கள் அகங்காரம் ஒடுங்கி அனுசூயையை மிகவும் கொண்டாடினார்கள். திருமாலும் அவளைப் புகழ்ந்து சென்றார்.

இராமர், சீதா பிராட்டியாரோடு காட்டிற்கேகி அங்கே வாசம் செய்தபோது இந்த அனுசூயை சீதா தேவிக்குக் கற்பிலக்கணத்தைப் போதித்து அவளை ஆசீர்வதித்தாள். இன்னும் இந்த அனுசூயா தேவியின் கற்பின் மகிமையால் நடந்த அற்புதச் செயல்கள் எத்தனையோ உண்டு.

இத்தகைய மகிமை வாய்ந்த அனுசூயையின் கற்பின் உயர்வைக் கண்டு ஒருகாலத்தில் பார்வதி, இலக்குமி, சரஸ்வதி ஆகிய மூவரும் பொறாமை கொண்டு, எவ்வித உபாயத்தாலாவது அவளுடைய கற்புக்குப் பங்கம் வரும்படி செய்து அதனை உலகத்திற்கு வெளிப்படுத்திக் காட்ட வேண்டும் என்று கருதித் தங்கள் கணவராகிய, சிவன், விஷ்ணு, பிரமா ஆகிய மூவர்களிடத்தும், "நீங்கள் மூவரும் அனுசூயையிடம் சென்று எவ்வகை உபாயத்தாலாவது, அவளுடைய கற்புக்குத் தோஷம் வரும்படி செய்து வர வேண்டும்" என்று கேட்டுக்கொண்டார்கள். எப்பேர்ப்பட்டவர்களும் மனைவியர் வார்த்தைக் கிசைந்து நடப்பது இயற்கையன்றோ? ஆதலின் அந்தத் திரிமூர்த்திகளும், அனுசூயையின் உயர்வை உணர்ந்தவர்களா யிருந்தும் தங்கள் மனைவியர் விருப்பத்தை நிறைவேற்றத் துணிந்து அனுசூயையிடம் சென்றார்கள். அப்பதிவிரதை அவர்களை வணங்கி உபசரித்து, "மும்பெருந் தேவர்களே! நீங்கள் மூவரும் அன்பு கூர்ந்து இங்கெழுந்தருளப் பெற்றதால் எனதில்லம் மிகப் புனிதமுடையதாயிற்று; நீங்கள் இங்கே வந்ததற்குக் காரணம் யாது? அடியேனால் ஆகவேண்டிய காரியம் யாதேனுமுளதோ?" என்று அவர்களை வினவினாள். அவர்கள் பதிவிரதா சிரோமணியே! மகா உத்தமியாகிய உன் கையால் நாங்கள் உணவு பெற்றுண்ண வந்தோம்; ஆனால் நீ எங்களுக்கு ஆடையின்றி உணவு பரிமாற வேண்டும்? அங்ஙனம் உணவு படைத்தால் மட்டுமே நாங்கள் அதனை உண்ணுவோம்; பெரியோரின் விருப்பத்தை நிறைவேற்றுதலன்றோ பதிவிரதைகளின் கடமை? ஆதலின் எங்கள் எண்ணத்தைப் பூர்த்தி செய்வாயாக" என்று மொழிந்தனர்.

இவர்கள் இங்ஙனம் கூறியது அசம்பாவிதமான செய்கையா யிருந்தபடியால் அநசூயை இதைப்பற்றி யோசிக்கலானாள். ஆடையின்றி அவள், ஆடவராகிய அம்மூவரின்முன் வந்தாலும் கற்புக்குப் பங்கம் வரும்; அவர்களின் விருப்பப்படி அவர்களுக்கு அன்னம் பரிமாறாவிட்டாலும் பதிவிரதா தருமம்

கெடும். ஆதலின், அவள் மேற்கூறியபடி ஆலோசித்து இருவகையிலும் தோஷமில்லாதபடி அவர்கள் விருப்பத்தை நிறைவேற்ற வேண்டுமென்று முடிவுசெய்து, அம்மூவரும் சிறுகுழந்தைகளாய்விட வேண்டுமென்று தியானித்தாள். அவளுடைய கற்பின் மகிமையால் அவள் நினைத்தவண்ணமே அந்த முப்பெருந் தேவர்களும் கைக்குழந்தைகளாய்க் 'குவா குவா' என்று அழுதார்கள். அநுசூயை அவர்கள் விரும்பிக் கேட்டபடியே அவர்களுக் கமுதூட்டி, அவர்களைத் தொட்டிலிற் கிடத்தித் தாலாட்டினாள். அவர்கள் அத்தொட்டிலிற் கிடந்து ஆடிக்கொண்டிருந்தார்கள்.

இவ்வாறு திரிமூர்த்திகளும் சிறுகுழந்தைகளாய்த் தொட்டிலுக்குள் அடங்கி ஆடிக்கிடக்கவே உலகத்தில் சிருஷ்டி திதி சம்மாரம் என்ற முத்தொழில்களும் நடைபெறாமல் உலகம் திண்டாட்டத்திற்குள்ளாயிற்று. தேவர்கள் கலக்க மடைந்தனர். பார்வதி, இலக்குமி, சரஸ்வதி ஆகிய மூவரும் இதனை உணர்ந்து, "நம் கணவரை மீண்டும் பெறுதற்கு என்ன செய்யலாம்?" என்று மனங் கலங்கினார்கள். பின்னர் அநுசூயையிடமே சென்று தம் குறையை நீக்கிக்கொள்ளவேண்டுமென்று துணிந்து அவளிடம் போய், "கற்பிற் சிறந்த உத்தமியே! நாங்கள் உன் கற்பைப் பரிசோதிக்கத் தொடங்கிக் கணவரை யிழந்து வருந்துகின்றோம்; நீ தயவு செய்து குழந்தைகளாயிருக்கும் எங்களுடைய பர்த்தாக்களை, முன் உருவத்துடன் எங்களுக் களிக்கவேண்டும்" என்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டார்கள். அநுசூயை அவர்களுடைய வேண்டுதலுக் கிசைந்து, திரிமூர்த்திகளையும் தங்கள் யதார்த்த ரூபத்துடன் வரச்செய்து அவர்களிடம் சேர்ப்பித்தனள். பிறகு எல்லோரும் மகிழ்ச்சியடைந்து அநுசூயையை வாழ்த்திச் சென்றார்கள்.

## கடவுளைக் காண்பதெப்படி?

ஈசுவரன் சர்வ வியாபகரானால், நாம் ஏன் அவரைப் பார்க்க முடியவில்லை? நெருங்கிப் பாசி பிடித்துள்ள ஒரு குட்டையின் கரையிலே நின்றுகொண்டு பார்த்தால் அக்குட்டையில் தண்ணீர் இல்லை யென்றே நீ சொல்வாய். நீ தண்ணீரைப் பார்க்க விரும்பினால், குளத்தின் மேல் மட்டத்திலிருந்து பாசியை நீக்கிவிடு. அப்போது ஜலம் தெரியும். இதுபோலவே மாயையாகிற பாசத்தினாலே மூடுண்ட கண்களை வைத்துக்கொண்டு நீ ஈசுவரனைப் பார்க்க முடியவில்லை யென்று குறை கூறுகிறாய். நீ அவரைப் பார்க்க விரும்பினால், உன்னுடைய கண்களிலிருந்து மாயாபடலத்தை நீக்கிவிடு.

ராமகிருஷ்ண பரமஹம்சர்—

# சுற்றந் தழுவுதல்.

(தென்னாப்பிரிகா-டர்பன், சரஸ்வதி சபைத் தலைவர்
திரு. ச. முனிசாமி பிள்ளை அவர்கள்.)

மக்களது இல்லற வாழ்க்கையில் பலவித அழகுகளும், இன்பங்களுமுண்டு. அவற்றுள் முதன்மையானது சுற்றந் தழுவுதல். சுற்றந் தழுவுதல் என்பது தன்னுடைய கிளைஞரைத் தன்னுள் நீங்காது அணைத்துக்கொள்ளுதல் என்று பொருள்படும். இக்காலத்தில் பலரும் பொருளுடையாரே சுற்றத்தார் என மதிக்கின்றனர். பொருளற்றவரை அங்ஙனம் சுற்றத்தாராக மதிப்பதில்லை. செல்வமெல்லாம் தொலைந்து வறியனாய காலத்தும், விடாது தமக்கும் அவர்க்கும் இடையிலுள்ள பழமையைப் பாராட்டக்கூடிய இயல்புடையவரே உண்மையான சுற்றத்தாராவார். பொருளுடையவரைத் தமரென்றும், சுற்றத்தாரென்றும் கொண்டாடுவது அத்துணை உயர்வுடையதன்று; அது பதில் உதவியை எதிர்பார்த்துச் செய்யும் சுயநன்மைச் செயல் ஆகும். பொருளுடையவரிடத்திலே சோறு கண்டவிடத்தில் காக்கையைப்போலப் பலரும் சூழ்வர்; அவரே வறியவராய்த் திரியுங்காலத்து அவரைச் 'சுகமா யிருக்கின்றீரா!' என்று கேட்பதைக்கூடச் சிலர் மதிப்புக்குக் குறைவென எண்ணுகின்றனர். நாம் இங்கே கூறும் சுற்றந் தழுவுதல் இங்ஙனம் செய்வதன்று. அன்பு நீங்காது எக்காலத்தும் ஒரு படித்தாகவே கொண்டாடும் இயல்புடைய சுற்றம் தழுவும் கொள்கையே. அன்பு நீங்காத சுற்றம் ஒருவர்க்குப் பொருந்துமாயின் அஃது அவருக்கு வளர்வதினின்றும் குறைவுபடாத செல்வங்கள் பலவற்றையும் கொடுக்கும். மனமொத்த சுற்றத்தினரோடு கூடிவாழும் வாழ்க்கையைப் பெற்றிராதவன் நீர் நிறைந்த கரையற்ற குளத்திற்குச் சமமாவான். தனது சுற்றத்தார் தன்னைச் சூழ்ந்திருக்குமாறு வாழ்வதுதான் செல்வம் படைத்ததால் வரும் பலனை அடைந்ததாம். சுற்றந் தழுவுதலுக்கு அறிகுறியாவது தன்னைச் சூழ்ந்திருக்கும் சுற்றத்தார்க்கு இயன்ற அளவு கொடுத்துதவுவது, இன்சொற்கூறி மகிழ்விப்பது முதலியனவாகும். உள்ளத்தை ஒளிக்காதவனும், கோபத்தைக் கொள்ளாதவனும், சுற்றத்தார் பலராலும் சூழப்படுவான். சுற்றந்தழுவும் குணத்தைக் கைக்கொள்ள விரும்புவோர் காக்கையின் குணத்தையும், செயலையும் கைக்கொள்ள முயலுவது தக்கதாகும். சுற்றத்தார் நிலைமைக்குத் தக்கவாறு தகுதி நோக்கி நடந்துகொள்ளவேண்டும். தமராகிய சுற்றத்தாரைப் பிறராக்கத் தக்க செயல்களைச் செய்து சுற்றம் தழுவாது வாழ்நாளை வீணாளாக்கிக் கொள்ளல்கூடாது. இங்ஙனம் சுற்றம் தழுவுதலின் உயர்வை உணர்ந்து ஒழுகுவாரின் அன்னார் பகையின்மை முதலியவற்றையும், அறமும் இன்புமேயன்றிப் பொருளையும் பெறுவர் என்பது ஒருதலை. 'சுற்றத்திற் கழகு சூழ இருத்தல்' 'செல்வர்க் கழகு செழுங்கிளை தாங்குதல்.'

# விசித்திர  விநோதம்



## "முட்டாள்தனம்"

மனைவி:—"இந்தச் சேலை எனக்குக் கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை."

கணவன்:—"மற்றச் சேலைகளையெல்லாம் விட்டு இதை நீதானே தெரிந்தெடுத்தாய்!"

மனைவி:—"நான்தான் தெரிந்தெடுத்தேன். நீங்கள் ஏன் அதற்கு முட்டாள்தனமாக ஒத்துக்கொண்டீர்கள்?"

***

## "இனாம்"



அயலூர்க்காரர் :—"அம்மா, இந்த இரண்டு இளநீர் சாப்பிட்டது என்னுடைய களைப்பை எவ்வளவோ ஆற்றிவிட்டது. இந்த இரண்டு இளநீருக்கும் நான் என்ன கொடுக்கட்டும்?"

கிழவி:—"ஐயோ! நாட்டுப் புறத்திலிருக்கும் நாங்கள் இந்த இரண்டு இளநீருக்குக் காசு வாங்கினால் அதைப்போல் அநியாயம் ஒன்றுமில்லை. அப்படியே உங்களிஷ்டமானால் சிறுவன் கையில் ஏதோ நாலணா, எட்டணா கொடுத்துவிட்டுப் போங்கள்."

***

கே:—யாருக்குப் பொல்லாத விஷயமும் நல்ல விஷயமாகிறது.

ப:—பத்திரிகா நிருபர்களுக்கு.

***

புருஷன்:-ஆகவே இனிமேல் நீ சிக்கன முறையைக் கையாளவேண்டும்.

மனைவி:—சந்தேகமென்ன? அதனால்தானே எல்லாம் கடனாக வாங்குகிறேன்.



### "உத்தியோகம் புருஷ லட்சணம்"

பெரியவர்:—"முன்னால் நீ வேலையில்லை யென்று கஷ்டப்பட்டுக்கொண்டிருந்தாயே, இப்போது எப்படி யிருக்கிறாய்?"

மற்றவன்:-"ஐயோ! அதை ஏன் கேட்கிறீர்கள்? நான் படிப்பும் பணமுமுள்ள ஒரு பெண்ணைக் கலியாணம் செய்துகொண்டேன். அவளுடைய துணிகளைத் தோய்த்துப்போடுகிற வேலையே எனக்கு இப்போது இடுப்பு ஒடிந்து போகிறது."

***

### "புத்திசாலி"



ட்ரைவர்:-"என்னடா எண்ணெய் வாங்காமல் வெறும் புட்டியைக் கொண்டுவந்திருக்கிறாய்?"

புதிதாய்வந்த கையாள்:-"வண்டியின் பின்னால் எரியும் சிவப்பு விளக்குக்குச் சிவப்பெண்ணெய் வேண்டுமென்று கடைகளெல்லாம் கேட்டும், ஒரு கடையிலும் கிடைக்கவில்லை. வேறு எண்ணெய் வாங்கிவந்து பிரயோஜனமென்னவென்று எண்ணிச் சும்மா வந்துவிட்டேன்."

***



### "காதல்"

மனைவி:—"நான் திடீரென இன்றிரவு இறந்துவிட்டால் நீங்கள் உடனே மறு விவாகம் செய்துகொள்வீர்களல்லவா?"

கணவன்:—"இன்றிரவே நான் மறு விவாகம் செய்துகொள்ள மாட்டேனென்று உறுதியாய்ச் சொல்வேன்."

***

கே:—முதல் முதல் சந்திரனைக் கொளுத்துவது யார்?

ப:—சூரியன்.

***

கே:—கெட்டுப்போன துப்பாக்கிக்கும் கெட்டுப்போன மனிதனுக்கும் வித்தியாசம் என்ன?

ப:—கெட்டுப்போன துப்பாக்கியில் தீ வைத்தாலும் அது சுடாது. கெட்டுப்போன மனிதன் தீ இல்லாமலேயே (நாவினால்) சுட்டுவிடுவான்.

### "ஜோசியம்"



ஜோசியர்:—"உம்முடைய ஜாதகத்திற்கு, நீர் கலியாணம் பண்ணினால், முதல் பத்து வருஷம் உமக்கும் உம்முடைய மனைவிக்கும் ஓயாத கடும் போராட்டமாகத்தா னிருக்கும்."

வாலிபர்:—(ஆத்திரத்துடன்) "அதற்கப்புறம்?"

ஜோசியர்:—"அதற்கப்புறம் நீர் உம்முடைய மனைவிக்கு முழுவதும் அடங்கி அடிமையாகிவிடுவீர்."



### "சாப்பாட்டுராமன்"



ரிக்ஷா இழுக்கும் ராமன் பந்தயத்திற்கு ஒருபடி அரிசிச் சாதமும், அரைக்கால் படி நெய்யும், பலவித காய்கறி பதார்த்தங்களும், அத்துடன் ஒரு டஜன் வாழைப்பழமும் சாப்பிட்டு விட்டுக் கடைசியாக மூன்று முட்டிக் கள் சாப்பிடக் கள்ளுக்கடைக்குப் போகும் வழியில்,

நண்பன்:—"நீ பந்தயம் கெலித்ததை உன் தாய்க்கு அறிவிக்க வேண்டாமா?"

ராமன்:—"அடே, கிழவியிடம் சமாசாரத்தைச் சொல்லி விடாதே! இன்று இரவு எனக்குச் சாப்பாடு போடமாட்டாள்."



### "குறிப்பறிதல்"



ஒருவர் தமக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்திருப்பதைத் தம் மைத்துனருக்கு அறிவிக்க எண்ணி அவரைப்பார்த்து "இன்று அதிகாலை எங்கள் வீட்டுக்கு ஒரு சிறுவன் வந்திருக்கிறான். அவன் தன்னை உங்கள் மருமகனென்று சொல்லிக் கொள்கிறான். நாங்கள் அவனை உபசரித்து வருகிறோம்" என்றார்.

மைத்துனர்:—"மருமகனா? அது எந்தத் திருட்டுப்பயல்? எனக்கு மாப்பிள்ளை யேது மருகனேது? அவனைச் செருப்பால் அடிக்காமலா இன்னும் வீட்டில் வைத்திருக்கிறீர்கள்?"



கேள்வி:—முகம் பார்க்கும் கண்ணாடியுடன் பேசுவதனால் என் பலனை இல்லை?

பதில்:—அதில் தெரிவது உன்னுடைய சாயலே.




மிருகேந்திரன் என்று சிறப்பித்துக் கூறப்படும் சிங்கத்தின் ஹிருதயம் கொடிய மிருங்களின் ஹிருதயங்களெல்லாவற்றையும் விட மிகச் சிறியதாகவே இருக்கிறதாம்.

*　　　*　　　*

சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் எகிப்து நாட்டை ஆண்டு வந்த இரண்டாவது ராமேஸ் என்ற மன்னனுக்கு 162-மக்கள் இருந்தார்களாம். 111 ஆண்கள். 51- பெண்கள்.

*　　　*　　　*

ஆங்கிலநாட்டுக் கவிகளில் பேர்பெற்ற ஷேக்ஸ்பியரின் மகளுக்குத் தன் தாய் மொழியான ஆங்கிலத்தை எழுதவோ படிக்கவோ தெரியாது என்று ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர்.

*　　　*

வியன்னு நகரில் ப்ராவுஸ்டல்ட்ஸ் என்ற மாது அருமையாக ஒரு பூனையை வளர்த்து வந்தாள். ஒரு நாள் அது இறந்துவிட்டது. பூனையின் பிரிவாற்றுமையால் அம்மாது தற்கொலை செய்து கொண்டாளாம்.

*　　　*　　　*

வட துருவத்திற்குச் சுமார் 1500 மைலுக்கு அப்பால் காந்த துருவமிருக்கிறதாம். திசையறிவிக்கும் காந்த ஊசி உண்மையில் வடதுருவத்தையோ தென்துருவத்தையோ காட்டவில்லை. அது வடக்கே இருக்கும் காந்த துருவத்தையே காட்டுகிறதாம்.

*　　　*　　　*

பிரிட்டனில் குஷ்டரோகத்தை ஒழிக்க ஆண்டுதோறும் 20,000,000 பொன் செலவு செய்து வருகிறார்கள்.

*　　　*　　　*

ஒரு ஏக்கர் நிலத்தில் சுமார் ஒரு அங்குல மழை பெய்யுமானால் அது சுமார் 100-டன் ஜலமாகும்.

*　　　*　　　*

ஜர்மனியிலுள்ள பெரிய துறை முகங்களிலும், பெரிய ரயில்வே ஸ்டேஷன்களிலும், புத்தக விற்பனைக்காக இயந்திரங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. அவற்றில் புத்தகத்தின் விலையைப் போட்டால் உரிய புத்தகம் வெளியே வருமாம்.

*　　　*　　　*

நாம் ஒரு காலத்தில் மீன்களாயிருந்தமையால்தான் கொட்டாவி விடுகின்றோம் என்று ஒரு ஜர்மன் டாக்டர் கூறுகிறார்.

*　　　*　　　*

உலகில் அதிகச் சூடான இடம் இமயமலைப் பனிக்கட்டிகட்கிடையில் இருக்கிறதாம். அதற்கு லாடாக் என்று பெயர். லாடாக் காஷ்மீரைச் சார்ந்தது. ஒவ்வொரு சமயம் அதன் சூடு 160-டிக்கிரி யாகும்.




**நீண்ட ஜெபமாலை**

அமெரிக்கா வாஷிங்டன் நகரிலுள்ள ஓர் ஆராய்ச்சி நிபுணர் ஆயிரம் ஆண்டுகளுக்கு முந்திய ஒரு பழைய சமாதியிலிருந்து 48-அடி நீளமுள்ள ஒரு ஜெபமாலையைக்கண்டு பிடித்திருக்கிறார். அதில் 5,700 மணிகள் அடங்கியிருக்கின்றனவாம்.

***

**செயற்கைச் சூரியன்**

அமெரிக்கா சிகாகோ நகரில் உலகப் பிரசித்திபெற்ற பாம் ஆலிவ்சோப், கால்கேட் டெண்டல் க்ரீம் என்ற பற்பசை ஆகிய இரண்டும் தயாரிக்கும் பெரிய வியாபாரக் கம்பெனியின் 39-மாடிகளுள்ள கட்டடத்தின் உச்சியில் 200 கோடி மெழுகுவர்த்திப் பிரகாசமுள்ள ஒரு ஜோதி விளக்கை வைத்திருக்கிறார்கள். இதைவிட ஒளி மிகுந்த விளக்கு உலகத்தில் வேறு இல்லை. இதன் உயரம் 602 அடி. 250 மைல்வரை இதன் வெளிச்சம் ஆகாயவிமானிகட்குத் தெரியும். 47 டன் எஃகைக்கொண்டு இது செய்யப்பட்டிருக்கிறது. ஆகாய விமானிகள் திசையறிந்து செல்லுவதற்கு மிகவும் உதவியா யிருக்கிறதாம்.

***

**வங்காள விமானப் பெண்மணி:—**

வங்காள ஆகாயப்படையில் பயிற்சி பெற்ற முதல் வங்காளிப் பெண்மணியான செளசுசமா மூக்கர்ஜி சமீபத்தில் வானவழியாக உலகமெங்கும் சுற்றி வரப் போகிறார். அவர் கல்கத்தாவில் புறப்பட்டு டில்லி, கராச்சி, கெயிரா, புதாபெஸ்டு, பாரிஸ், லண்டன், பெர்லின், மாஸ்கோ, இர்குட்ஸ்க், டோக்கியோ, ஷாங்காய், பாங்காக, ரங்கூன் வழியாகத் திரும்பவும் கல்கத்தாவந்து சேர்வார். இவரது முயற்சியை ஆதரிப்பதற்காக ஸ்தல ஸ்தாபன மந்திரி—ரவீந்திரநாத தாகூர் ஆகிய இருவரும் அடங்கிய ஒரு பஞ்சாயத் ஏற்பட்டிருக்கிறது.

***

**விமானமற்ற வானப் பிரயாணம்:—**

மோட்டாரில்லாத விமானமொன்றின் உதவியால் ஒருவர் ஆல்ப்ஸ் மலையைக் கடந்துவிட்டார். அவர் போன தூரம் 120-மைல்களாம். அதாவது சூரிச் முதல் மிலான்வரையிலும் பறந்து போனார். நல்ல களங்கமற்ற வானத்தில் ஒரு "புஸ்மாத்" விமானத்தில் 12000-அடி உயரம் சென்று அப்பால் அங்கிருந்து 16-அடி நீளமுள்ள (மோட்டாரில்லாத) விமானத்தின்மூலம் நழுவிப் பூமியில் இறங்கினார். வழியில் எவ்வித ஆபத்தும் வரவில்லை.

# ஆசிரியர் குறிப்புக்கள்.

## "வெள்ளைக் காகிதம்"

சென்ற மார்ச்சு மாதம் 18-ம் தேதியில் வரப்போகும் இந்திய அரசியல் சீர்திருத்தத் திட்டம் அடங்கிய "வெள்ளைக் காகித" அறிக்கை வெளியிடப் பட்டது. இந்த அறிக்கையில் கண்ட திட்டம் மிதவாதத் தலைவர்களுக்குங் கூடத் திருப்தி அளிக்கவில்லை. அது நாடெங்கும் ஒருமுகமாகக் கண்டிக்கப் பட்டுவிட்டது. ஆயினும் என்ன? பிரிட்டிஷ் அரசாங்கத்தார் அதைத்தான் வழங்கப்போகிறார்கள். புதிய அரசியல் சீர்திருத்தம் என்பது வெறுங் கண்ணைத் துடைக்கும் வியாபாரம் என்றே கூறவேண்டும். காந்தியடிகளும் காங்கிரஸும் கடைசியில் விரும்பிய ஐக்கிய ஆட்சி முறையுங்கூட எப்பொழுது வரும் என்று தெரியவில்லை. இப்பொழுது மாகாணச் சுயவாட்சி வழங்கப் படுமாம். ஐக்கிய ஆட்சி முறையை ஏற்படுத்தச் சுதேச சமஸ்தாதிபதிகளைக் கலந்து யோசிக்கவேண்டுமாம். ரிஜர்வ் பாங்கி ஏற்படவேண்டுமாம். ஆகையால் இப்பொழுது மாகாண சுயவாட்சி வழங்கப்பட்டிருக்கிறதாம். "வெள்ளைக் காகிதம்" வைஸிராய்க்கும் கவர்னர்களுக்கும் அளவு கடந்த அதிகாரங்களைக் கொடுத்திருக்கிறது. ராணுவம், பொக்கிஷம், வியாபார சம்பந்தம் முதலிய உரிமைகளெல்லாம் அவர்களிடமே இருக்கும். பேருக்கு மந்திரிகளும் சட்டசபைகளும் சிருஷ்டிக்கப்படும். எப்பொழுது வேண்டுமானாலும் வைசிராயும்—கவர்னர்களும் அவசரச் சட்டங்களை உண்டாக்கிப் பிரயோகம் செய்யலாம். காந்தியடிகளையும் ஏனைய தேசபக்தர்களையும் சிறைகளில் அடைத்து வைத்துக்கொண்டு இந்தப் பயனற்ற அரசியல் சீர்திருத்தத் திட்டத்தை அரசாங்கத்தார் எப்படி அமல் நடத்தப்போகிறார்களோ தெரியவில்லை.

***

## காங்கிரஸ் மகாநாட்டுக்குத் தடை

புதிய அரசியல் சீர்திருத்தம் நடைமுறையில் வரப்போகும் இச்சமயத்தில் அரசாங்கத்தார் கல்கத்தா காங்கிரஸைத் தடைசெய்தது ஒரு சிறிதும் நியாயம் அல்ல. காங்கிரஸ் கமிட்டிகள் சட்டவிரோதமான ஸ்தாபனங்கள் என்று அறிவிக்கப்பட்டிருந்தாலும் காங்கிரஸ் மகாநாடு சட்ட விரோதமானதல்ல என்று அரசாங்கத்தாரே ஒப்புக்கொண்டிருக்கின்றனர். அப்படியிருந்தும் காங்கிரஸுக்குச் செல்ல முயன்ற பண்டித மதன்மோஹன் மாளவியாபோன்ற தலைவர்களையும் ஆயிரம் பேர்களுக்கு அதிகமான தேசபக்தர்களையும் கைதுசெய்ததும், சிறைகளில் அடைத்ததும், பலரைத் தடிகளைக் கொண்டு தாக்கியதும் என்ன முறை என்று கேட்கின்றோம். நாட்டில் அமைதியைக் காக்க விரும்பும் அரசாங்கத்தார் தற்காலப் பொது ஜனங்களின் போக்கையும் தலைவர்களின் மனப்பான்மையையும் அறிந்துகொள்ளாமல் வீண் பிடிவாதம் காட்டி வருவது பெரிதும் வருந்தத்தக்கதாகும்.

***

## ரிஜிஸ்ட்ரேஷன் கட்டணங்கள்

அரசாங்கத்தார் ரிஜிஸ்ட்ரேஷன் கட்டணங்களையும், ஸ்டாம்புக் கட்டணங்களையும் பின்னர்க் குறைத்துவிடுவதாக உறுதிகூறி உயர்த்தினார்கள். ஆனால் இதுகாறும் ஒன்றும் குறைக்கப்படவில்லை. ஒவ்வொரு வருஷமும்

சட்ட சபையில் இதைப்பற்றிய பேச்சும் முறையீடும் வந்துகொண்டேயிருந்தும் அரசாங்கத்தார் சிறிதேனும் லட்சியம் செய்யவில்லை. சென்ற மாதமும் இந்த விவாதம் எழுந்தது. பொருள் முடை அதிகமாயிருக்கும் இக்காலத்தில் ரிஜிஸ்ட்ரேஷன்—ஸ்டாம்புக் கட்டணங்களின் பளு ஏழை மக்களின் கழுத்துக்களை முரித்துக் கொண்டிருக்கின்றது. பெரும்பாலும் இவ்விரு பாரங்களையும் தாங்கவேண்டியவர்கள் கிராமாந்தர ஏழை விவசாயிகளே. ரிஜிஸ்ட்ரார் ஆபீசுக்குச் சென்று பதிவு செய்து கொண்டாலொழிய தஸ்தாவேஜிகள் செல்லுபடியாகா என்றிருப்பதனால் கட்டாயமாய்ப் பதிவு செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது. ஆனால் இதற்குச் செலவு செய்ய அவ்வேழை மக்களிடம் பணம் இல்லை. வரிப் பளுவைத் தாங்குவதா? கட்டணப் பளுவைத் தாங்குவதா? குடும்பப் பளுவைத் தாங்குவதா? என்ற நெருக்கடியான நிலை இக்காலத்தில் ஏழை மக்கட்கு ஏற்பட்டிருக்கிறது. மந்திரி கனம் பி. டி. ராஜன் அவர்கள் சட்டசபையில் சம்பிரதாயப் பேச்சுப் பேசினாரேயொழிய அங்கத்தினர்கட்குச் சரியான விடை அளிக்கவில்லை. கட்டணங்களைக் குறைத்தால் சர்க்காருக்கு நஷ்டம் ஏற்படும் என்றும் தற்கால நிலைமையில் அரசாங்கத்தார் அவ்வளவு செலவைத் தாங்க மாட்டார்கள் என்றும் மந்திரி கூறினார். இவர் பொருள் நெருக்கடியை இதற்குக் காரணமாகக் கூறினால் மக்களுக்கும் இந்தக் காரணம் பொருந்துமா பொருந்தாதா என்று கேட்கின்றோம். மக்கள் கையில் பொறுப்பில்லாத வரையில் இத்தகைய துன்பங்கள் ஏற்பட்டுக்கொண்டே இருக்கும் என்பதை விரிக்கவும் வேண்டுமோ?

***

## விதவா விவாக சகாய சபை

லாகூர் விதவா விவாக சகாய சபையினது சென்னைக் கிளையின் அறிக்கை வரப்பெற்று மகிழ்ந்தோம். 1928-ம் ஆண்டில் சென்னையில் லாகூர் சபையின் கிளை நிறுவப்பட்டது. சென்னையை அடுத்த தியாகராய நகரில் விதவைகள் விடுதி ஒன்று ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. ஆண்டு முடிவில் 247 பேர் ஷை சபையில் அங்கத்தினர்களாய்ச் சேர்ந்திருக்கின்றனர். ஆங்கிலம் தமிழ், தெலுங்கு, மொழிகளில் நூல்கள் வெளியிடப்பட்டு அவற்றின் வாயிலாகப் பிரசாரம் நடைபெற்றிருக்கிறது. சென்ற ஆண்டில் 50 விதவா விவாகங்கள் நடைபெற்றிருக்கின்றன. அவற்றுள் பதினைந்து சென்னை நகரில் நடைபெற்றன. விவாகம் செய்துகொள்ள விரும்பும் விதவைகள் தற்காலிகமாய் வசிக்கும் பொருட்டு "ஸ்ரீ கங்காராம் விதவா பவனம்" திறக்கப்பட்டிருக்கிறது. சென்னை மாகாணத்தில் வெளியிடங்களில் 4 கிளைகளே இருப்பதாகத் தெரிகிறது. ஒவ்வொரு பெரிய சிறிய நகரத்திலும் இதன் கிளைச்சபைகள் ஏற்படவேண்டுமென்பது எமது பேரவா வாகும். லாகூர் விதவா விவாக சபையின் மூலபுருஷரான ஸ்ரீ கங்காராம் அவர்களின் உதார குணம் சென்னை மாகாண விதவைகளின் விமோசனத்திற்கும் பேருதவியாயிருப்பது பெரிதும் போற்றத்தக்கதாகும்.

***

## அக்கிரமக் கட்டளை

ஏதாவது ஒரு சட்டமோ விதியோ ஏற்படுத்துவதாயிருந்தால் அது பலரும் சரி என்று ஒப்புக்கொள்ளும்படியான முறையில் அமைந்திருக்கவேண்

டும். இன்றேல் எல்லாரும் எள்ளி நகையாடுவதற்குரிய விஷயமாகி விடும். கோவா என்பது பம்பாய்க்குப் பக்கத்தில் போர்ச்சுகீஸ் குடியரசைச் சேர்ந்த ஒரு பிரதேசம். அங்குள்ள ஒரு நியாயாதிபதியின் செயல் எந்த நீதிச் சட்டத்தை ஒட்டியது என்று எமக்கு விளங்கவில்லை. கோவாவில் கிறிஸ்தவர்கள் அதிகம். அந்நியாயாதிபதி கிறிஸ்தவர்களல்லாத ஏனைய இந்துக்களும் முஸ்லிம்களும் கோர்ட்டுக்கு வரும்போது தலைப்பாகைகளையோ, துருக்கிக் குல்லாய்களையோ தரித்துக்கொள்ளக்கூடாது என்று கட்டளை பிறப்பித்தாராம். அப்படித் தரித்துக்கொண்டு வருவதால் கோர்ட்டின் மரியாதையே கெட்டுவிடும் என்பது அவரது எண்ணம். நல்ல மரியாதை! இதை மீறிய நான்கு இந்துக்களுக்கு அபராதம் விதித்ததாக வெளிவந்த ஒரு செய்தியை அறிந்து நாம் ஆச்சரியம் அடைகின்றோம். இனிமேல் அந்நியாயாதிபதி என்பவர் யாரும் வேஷ்டி கட்டிக்கொண்டு கோர்ட்டுக்குள் வரக்கூடாதென்றும் கட்டளை யிடுவார்போலும்! இதுவா குடியாட்சி ராஜ்யத்தின் நீதி? இத்தகைய அந்தர் தர்பார் நியாயாதிபதிகளும் இதர உத்தியோகஸ்தர்களும் எங்கும் இருக்கிறார்கள். பிறகு கிடைத்த ஒரு செய்தியால் போர்ச்சுகல் குடியேற்ற நாட்டு மந்திரி மேற்படி மாஜிஸ்ட்ரேட்டின் கட்டளையை ரத்துசெய்துவிட்டதாக அறிந்து மகிழ்கின்றோம்.

***

## திவான்பகதூர் கேசவப் பிள்ளையின் பிரிவு

தென்னாட்டின் மாபெருங் கிழவர்—சிறந்த அரசியல் அறிஞர்—உண்மையான தேசபக்தர்—ஏழைகள் தோழர் திவான்பகதூர் கேசவப்பிள்ளை அவர்கள் சென்ற மாதம் உலக வாழ்வை நீத்தார் என்ற செய்தி கேட்டுப் பெரிதும் வருந்துகின்றோம். உயர்திரு. பிள்ளை அவர்கள் தமிழகத்தில் பிறந்து ஆந்திர நாட்டில் வழக்கறிஞராக வாழ்க்கை நடத்திப் புகழொளி பரப்பினர். இவர் நீண்டகாலம் சென்னை சட்டசபை அங்கத்தினராகவும் உபதலைவராகவும் வீற்றிருந்து அருந்தொண்டாற்றி யுள்ளார். திவான்பகதூர் கேசவப்பிள்ளை அஞ்சா நெஞ்சு படைத்தவர். தமக்கு உண்மை என்று பட்டதை ஒளி மறைவின்றி எடுத்துக்காட்டிப் போராடக்கூடிய இயல்பு படைத்தவர். அவருடைய அரிய உழைப்பால் சிறைச்சாலைகள் குறிப்பிடத்தக்க சீர்திருத்தம் அடைந்தன. காட்டிலாகா மக்கட்கு அநுகூலமான முறையில் பல சீர்திருத்தங்கள் அடைந்தது. திரு. பிள்ளையவர்கள் ஏழை விவசாயிகட்காகவும், தொழிலாளர்கட்காகவும் தமது வாழ்நாளில் பெரும் பகுதியைத் தத்தம் செய்திருந்தார். அவர் சிறந்த நூலாராய்ச்சியாளராகவும் விளங்கினார். அவர் சமூகச் சீர்திருத்தம்—அரசியல் சீர்திருத்தம்பற்றி அடிக்கடி பத்திரிகைகட்குக் கட்டுரைகள் எழுதி வந்தார். எழுபத்திரண்டு வயதான வயோவிருத்தராயும், சீல விருத்தராயும், ஞான விருத்தராயும் விளங்கிய திவான்பகதூர் கேசவப் பிள்ளை அவர்களை இழந்தது தென்னாட்டுக்கு ஈடு செய்ய முடியாத பெரிய நஷ்டமாகும். இத்தகைய பெரியாரைப் பிரிந்து வாழும் அவருடைய குடும்பத்தாருக்கு எமது மனமார்ந்த அநுதாபத்தைத் தெரிவித்துக்கொள்கின்றோம். அவரது ஆன்மா அமைதி யுறுவதாக.



# நீல அறையின் மர்மம்.

(எஸ். எஸ். வாஸன்.)

(719-ம் பக்கத் தொடர்ச்சி.)

சபாபதி முதலியார் என்ன செய்கிறானென்பதை என்னுடைய மறைவிடத்திலிருந்து கவனித்துக்கொண்டு வந்தேன். ஆனால் அவன் என் பின்னால் வந்து ஒளிந்து கொண்டிருப்பதைப் பார்த்திருக்கலாமென்றும் சந்தேகப்பட்டேன்......சிறிது நேரம் அவன் அங்கிருந்து விட்டு வந்த வழியே திரும்பி விட்டான். அவனுடைய போக்கிடங்களையும் அவனுடைய நடவடிக்கைகளையும் கவனிக்க வேண்டுமென்ற எண்ணத்தினால் நானும் அவன் பின்னேயே தொடர்ந்து சென்றேன். வெகுதூரம் சென்றபின் அவன் ஒரு ஹோட்டலுக்குள் நுழைந்தான். நான் அங்குஞ் சென்று இரகசியமாய் விசாரித்ததில் அவன் அவ்வூரில் இரண்டு நாட்களுக்கே இருக்கப் போவதாகத் தெரிந்தது.

ஏதோ எனக்காவது அல்லது இறந்தும் உயிருடனிருக்கிற என் மனையாளுக்காவது இந்தச் சபாபதியும் இவனைச் சேர்ந்தவர்களும் தீங்கு செய்ய உத்தேசித்திருக்கிறார்களென்பது நன்றாய்த் தெரிந்தது. இதனால் நான் பல்லாவரத்திலிருப்பது அவனுக்குத் தெரியாமலிருக்கவேண்டுமென்று ஈசனைத் துதித்தேன். சபாபதியை யிப்போது நான் கண்டது எனக்கு அநுகூலமா யிருந்தாலும் இருக்கலாம்.

இரவு 8-மணிக்கெல்லாம் நான் சாப்பிட்டுவிட்டுக் காற்றாட மாசிலாமணி முதலியாரின் பங்களாவை நோக்கிச் சென்றேன். கொஞ்ச தூரத்திற்கப்பால் சபாபதி முதலியாரும் வாயில் ஒரு சுருட்டைப் பற்ற வைத்துக்கொண்டு மற்றொரு பக்கமிருந்து பங்களாவை நோக்கிப் போய்க்கொண்டிருந்தார். அவர் எங்கே போய்க்கொண்டிருக்கிறார் என்பதைக் கவனித்துக்கொள்ளும் பொருட்டு நான் சந்தடி செய்யாமல் அவர் பின்னேயே தொடர்ந்து சென்றேன். பங்களாவின் தோட்டத்துக் கதவு பூட்டப்பட்டிருந்தமையாலும் இவன் உள்ளே போக யத்தனித்திருந்தமையாலும் இவன் எவ்வாறு செல்லக் கூடும் என வியந்து நின்றேன். ஆனால் ஒருமுறை இவன் தன்னைச் சுற்றிப் பார்த்துவிட்டு நடுநிசி கள்ளன்போல் சுவரேறி உட்குதித்து விட்டான். இரண்டொரு நிமிடங்களான பிறகு நானும் வேறொரு பக்கமாய் உட்குதித்தேன். அவன் தோட்டத்திற்குள்ளே மயங்கி நின்று கொண்டிருந்தபடியால்

நான் புதருக்குள் சந்தடி செய்யாமல் நுழைந்து ஒளிந்து கொண்டிருந்தேன். வீட்டின் ஜன்னல்கள் வழியாக வெளிச்சம் வந்துகொண்டிருந்தது. தாழ்வாரத்தில் இருவர் உலாவிக்கொண்டிருந்தார்கள். சிறிது நேரம் கழித்து அவர்களுள்ளே நுழைந்து விட்டபடியால் நான் என்னுடைய மறைவிடத்திலிருந்து தைரியமாக வெளிவந்து ஒரு ஜன்னலின் வழியாய் உள்ளே பார்த்தேன். அவ்வறையில் ஒரு கூட்டம் கூடியிருந்தது. அங்கு என் காதலியைக் காணேம். அவளை ஒரு முறை பார்த்து ஆனந்தமடைய வேண்டுமென்றே நான் இவ்வளவு ஆபத்திற் குட்பட்டேன். ஆனால் அவளையும் பாலாமணியையும் பார்க்க முடியவில்லை. நானிவ்வாறு நின்று கொண்டிருக்கையில் என்னருகில் யாரோ வருவதாக காலடிச்சத்தம் கேட்டபடியால் நான் பின்னால் நகர்ந்து ஒரு சிறிய புதரின் கண்ணே மறைந்து கொண்டேன். இவன் விருந்தாளிகளி லொருவனுயிருக்க வேண்டுமென்று என் மனதிற்பட்டது.

இவ்வாறு நான் என்காதலி எங்கிருக்கிறுள் என்று பார்த்துக் கொண்டிருக்கும் சமயத்தில் சபாபதி முதலியார் எங்கேயோ மறைந்து விட்டான். இந்த சமயத்தில் சபாபதியை விட்டுவிடக்கூடாது என்று தோன்றிய படியால் நான் அவனொளிந்து கொண்டிருந்த பக்கமாய்ச் சென்றேன். தோட்டத்திற்குள்ளே நானிருந்த இடத்திற்கும் அவனொளிந்து கொண்டிருந்த இடத்திற்கும் நடுவே ஒரு சிறிய குளமுண்டு.

நான் அதைக்கடந்து செல்லுகையில் திடீரென ஒரு சத்தம் கேட்டது. அது யாரோ ஒருவர் இருமினுற்போலிருந்தது. நான் வியந்து நிற்க வேறொரு சத்தமும் கேட்கவில்லை. இந்த பயத்தினுல் சிறிது நேரம் கழித்து நான் மறைந்து மறைந்து போகலானேன். கொஞ்சதூரம் போன பிறகு சில மனிதர்கள் பேசிக்கொண்டிருந்ததாகக் கேட்டது. உடனே நான் அங்கேயே நின்றுவிட்டு என்ன பேச்சு என்பதைக் கவனிக்கலானேன்.

இரண்டு நிமிடங்கள் கழிந்தன. நான் வேறொரு பக்கமாய் சந்தடி செய்யாமல் சென்று சத்தம் வந்த இடத்தை நோக்க ஒரு ஸ்திரீயினுருவம் தெரிந்தது. இன்னும் சிறிது எட்டிப்பார்க்க ஒரு மனிதனும் அவளுடன் பேசிக்கொண்டிருந்ததாகத் தெரிந்தது. அவர்கள் பேசியது எனக்கு அநேகமாகத் தெளிவாய்க் கேட்டது.

மனிதன்:—நீ உண்மையாக என்னைப் பார்க்க வேண்டுமென்ற எண்ணம் கொண்டிருந்தால் நீ என்னை இதற்கு முன்பே பார்த்திருப்பாய். இந்த ஒரு மணி நேரமாக நான் அதோ அந்தப் புதரண்டை காத்திருந்தேன். மேலும் இங்கு வருவது எனக்கு ஆபத்தாய் தோன்றியது—என்றான். இதற்கு,

அவள்:—நான்தான் உன்னை வரவேண்டாமென்று சொன்னேனே—என்றாள்.

குயிலை யொத்த இவள் குரலினின்று இவள் என் காதலியின் குரலன்றி வேறொருவருடையதன்றெனத் தெரிந்து விட்டது. உடனே,

அம்மனிதன்:—நானெப்படி உன்னைப் பார்க்காமற் போவது? என்னு ஆபத்தைக்கூட கவனிக்கவில்லை.

அவள்:—உனகேது ஆபத்து நீ இங்கு வருவதனுல் எனக்குத்தான் தீங்கு நேரிடும்.

அம்மனிதன்:—(சிரித்துக்கொண்டே) அப்பப்பா! இதற்கெல்லாம் உன்னைப்போலொத்தவர்களுக்கு சூழ்ச்சி தெரியாமலா போய்விடும். நாமிருவரும் சந்தித்துப் பேசவேண்டியது மிகவும் அவசியமா யிருந்தபடியால் தான் நான் எதையும் கவனியாது இங்கு இவ்வாறு வரலானேன்.

அவள்:—நல்லது! நீ வந்த காரியமென்ன?

அம்மனிதன்:—உன்னுடன் சில முக்கிய சங்கதிகளைப்பற்றிப் பேச வேண்டும்.

அவள்:—பேச வேண்டியதுடன் வழக்கம்போல் பணமும் வேண்டுமோ?

அவன்:—பணமா! இல்லை! இல்லை!! பணம் எனக்கு அவ்வளவு முக்கியமில்லை.

அவள்:—வந்த காரியத்தைச் சொல். எனக்கு நேரமாய் விட்டது. நான் போகவேண்டும்.

அவன்:—என்? உன்னுடைய காதலன் உன்னை சந்தேகிப்பான் என்று நினைக்கிருயோ? என்ன பிரமாதம். இதுவரை அவனை ஏமாற்றிய விதமாகவே இப்பொழுதும் செய்கிறதுதானே. அடடா! பொய் பேசுவதிலும் பிறரை ஏமாற்றுவதிலும் என்னசந்தோஷம்! எனக்குப் பொய்யர்களைக் கண்டால் ஆகாது. ஏனென்ருல் அவர்கள் தங்கள் வாழ்நாட்களை வெகு தந்திரமாய்க் கழித்து விடுகிருர்கள்.

இந்தக் குரல் இவ்வளவு நேரம் கழித்த பிறகு நான் சந்தேகித்தது போலவே எனக்குத் தெரிந்த ஒருவனுடையதெனத் தெளிந்தேன்.

அவள்:—எனக்கு பொய் பேசுவதில் இஷ்டமே கிடையாது. இதுவரை நான் பொய்பேசியதென்னமோ வாஸ்தவம். ஆனல் அவைகள் உன்னுடைய கட்டாயத்தினுல்தான்.

அவன்:—என்? உன்னைக் காப்பாற்றிக் கொள்வதற்காகவே நீ இப்படி நடந்துகொள்ள வேண்டியதா யிருக்கிறது.

அவள்:—சரி, போன விஷயங்களைப்பற்றிப் பேசிக்கொண்டிருக்க நேரமில்லை. இப்போது நாமிருவரும் சந்தித்துப்பேச வேண்டுமென்று நீ நிர்ப்பந்தப்படுத்துவதின் காரணமென்ன? நீ எங்கேயா வெளியூருக்குப் போகப் போவதாகச் சொல்லினையே? போகவில்லையா?

அவன்:—நான் போய்விட்டுத் திரும்பி விட்டேன்.

அவள்:—எங்கே போயிருந்தாய்?

அவன்:—அது என்னுடைய விஷயம். உனக்குச் சொல்லவேண்டிய தவசியமில்லை. நீதான் என்பேரில் வெறுப்புக் கொண்டிருக்கிருயே?

அவள்:—என்னுடைய விரோதிகளின் பேரில் வெறுப்பு இல்லாமல் பிரியம் ஏற்படுமோ?

அவன்:—ஓஹோ! நான் உன்னுடைய விரோதியா?...பேஷ்! ஆனல் நான் உன்னை நேசித்து வரும் விஷயம் உனக்கு எப்படித் தெரியும்?

அவள்:—நேசமா? நீ செய்யும் காரியங்கள் உன்னுடைய நேசத்தைக் காண்பிக்க வில்லையே? நீ செய்யும் கொடிய சூழ்ச்சிகளுக்கு நான் உதவிபுரிய வேண்டுமென்று கட்டாயப்படுத்துகிருய்! இவ்விஷயங்களில் உதவிபுரிய எனக்கு இஷ்டமில்லை.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

**ஸ்ரீமுக௵ சித்திரைமீ—கலியுகாதி 5035, சாலிவாகனம் 1856**
**பசலி 1342, கோல்லமாண்டு 1107, ஹிஜரி 1351-52,**
**இங்கிலீஷ் 1933௵ ஏப்ரல்மீ—மேமீ**

| சித்திரை | ஏப்ரல் | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 13 | வியா | திரி8-28 | அனு51-38 | சி51-38பி | [ஸ்ரீமுக வருஷப் பிறப்பு மேஷரவி நா9-37-விஞடி, |
| 2 | 14 | வெ | சது0-25<br>பஞ்53-3 | கே46-13 | ம46-13அ | வராஹஜயந்தி, அவமாகம் |
| 3 | 15 | சனி | சஷ்46-50 | மூல41-45 | சித்60 | |
| 4 | 16 | ஞா | சப்41-45 | பூரா38-20 | சி38-20அ | |
| 5 | 17 | திங் | அஷ்37-58 | உத்36-18 | ம36-18அ | |
| 6 | 18 | செவ் | நவ35-30 | திரு35-38 | சித்60 | |
| 7 | 19 | புதன் | தச34-25 | அவி36-18 | பி36-18சி | |
| 8 | 20 | வியா | ஏகா34-38 | சத38-5 | ம38-5சி | |
| 9 | 21 | வெள் | து35-55 | பூர41-5 | சித்60 | |
| 10 | 22 | சனி | திர38-18 | உத்45-3 | சி45-3ம | |
| 11 | 23 | ஞா | சது41-33 | ரே49-50 | அ49-50சி | |
| 12 | 24 | திங் | ● அ45-33 | அஸ்55-30 | சித்60 | |
| 13 | 25 | செவ் | பிர50-25 | பர60- | சித்60 | மூலிகை உபயோகிக்க |
| 14 | 26 | புத | துதி55-55 | ✱1-50 | சி1-50அ | கிருத்திகை |
| 15 | 27 | வியா | திரி60 | கிரு8-55 | மர60 | பரசுராமஜயந்தி, கரிநாள் |
| 16 | 28 | வெள் | திரி1-53 | ரோ16-13 | மர16-13சி | மாச சதுர்த்தி விரதம் |
| 17 | 29 | சனி | சது[illegible]-5 | மிரு23-43 | சித்60 | சங்கர ஜயந்தி |
| 18 | 30 | ஞா | பஞ்14-8 | திரு31-0 | சித்60 | சஷ்டி, உடையவர் ஜயந்தி |
| 19 | 1 | திங் | சஷ்19-35 | புன37-33 | அ37-33சி | விவாகம், பும்சவனம் |
| 20 | 2 | செவ் | சப்23-55 | பூச43-3 | சித்60 | கங்கோற்பத்தி |
| 21 | 3 | புதன் | அஷ்26-43 | ஆயி46-53 | சித்60 | கத்தரி ஆரம்பம்,நா-41-33 |
| 22 | 1933 மே 4 | வியா | நவ 7-40 | மகம்48-53 | அ48-53சி | தானியம் செலவிட |
| 23 | 5 | வெ | தச26-38 | பூர48-48 | சித்60 | வியாதியஸ்தர் குளிக்க |
| 24 | 6 | சனி | ஏகா23-25 | உத்46-40 | மர60 | சர்வ, மத்வ ஏகாதசி |
| 25 | 7 | ஞா | து18-20 | அஸ்42-40 | அ42-40சி | பரசுராம த்வாதசி |
| 26 | 8 | திங் | திர11-33 | சித்37-8 | பி37-8அ | சித்திரகுப்த பூஜை |
| 27 | 9 | செவ் | சது3-28<br>◯54-23 | சுவா30-30 | சி30-30ம | சித்ரா பௌர்ணமி, சம்பத் கௌரி விரதம் |
| 28 | 10 | புத | பிர44-5 | விசா23-13 | சித்60 | வைசாகபகுளம் |
| 29 | 11 | வியா | துதி33-28 | அனு15-48 | சி15-48 | விவாகம், வித்யாரம்பம் |
| 30 | 12 | வெள் | திரி26-25 | கேட்8-38 | ம8-38அ | குளம் கிணறு வெட்ட |
| 31 | 13 | சனி | சது15-23 | மூல2-3<br>பூரா56-50 | சித்60 | சங்கஷ்ட சதுர்த்தி, கணிதாரம்பம், கடன் தீர்க்க |

| | | | |
|---|---|---|---|
| சுக் புத | சூரி | | |
| ராகு | 2-மே-சுக்<br>23-மே-புதன்<br>27-ரிஷ-சுக் | | |
| சனி | | | குரு செவ் கே |
| | | | |

Printed & Published by N. Munisawmi Mudaliar,
at the "Ananda Bodhini" Press,
No. 6, Lawyer Chinnathambi Mudali Street, Madras.